KALKI 9.9.90 ரூ. 2.50

# கல்கி

பட்டுக்கோட்டைத் தொகுதி:

இதுவரை ஏதும் செய்யவில்லை!





## காற்று இருக்கையும் தண்ணீர்ப் படுக்கையும்!

இந்தியாவிலேயே முதல் முறையாக

# எப்போதும் உலர்ந்த உணர்வு+ மும்மடங்கு ஈர்ப்பு

பிரிமாதான் எனக்கு அளிக்கிறது
அந்த உண்மையான தூய உணர்வையும்,
உலர்ந்த தன்மையையும்

ஆம்... அதிநவீன ரோஸ் நிற பிரிமா தான் இரண்டு தனிச்சிறப்பு அம்சங் களைக் கொண்ட - இந்தியாவின் முதல் சானிடரி நாப்கின்

பிரிமாவின் பிரத்யேக மான மென்மையான **எப்போதும் உலர்ந்த** மேலுறை சாரத்தை உறிஞ்சிக் கொள்வதோடு - உங்களுக்கு தூய உணர்வையும் உலர்ந்த தன்மையையும் அளிக்கிறது.

பிரிமாவின் **மூன்று உள்மடிப்புகள்** மிக அதிகமான உறிஞ்சும் தன்மையை அளிக்கிறது.

இத்துடன் -
அதிக இதம் தரும் வளைந்த ஓரங்கள்;
கூடுதல் பாதுகாப்பு அளித்திடும்
ரோஸ் நிற பிளாஸ்டிக் கவசம்.

PRIMA
Clean & Dry
Sanitary Napkins

ரெகுலர்: • பெல்ட் • பெல்ட்லெஸ் எக்ஸ்ட்ரா லார்ஜ்: • பெல்ட் • பெல்ட்லெஸ்
10 நாப்கின்கள் கொண்ட பாக்கெட்களும், 2 நாப்கின்கள் கொண்ட கைக்கு அடக்கமான பாக்கெட்களும்

பிரிமியர் மில்ஸ்
குழு அளித்திடும்
No. 1 தயாரிப்பு

**வாங்குவீர் பிரிமா,**
**அந்த உண்மையான—தூய மற்றும் உலர்ந்த தன்மையை உணர்ந்திட**

LINTAS M PMA P2 2416 TM

இப்போது தப்பிப் போன ஆட்டோ சங்கரைப் பிடிப்பது ஒருபுறம் இருக்கட்டும். சில மாதங்களுக்கு முன்பே, ஏ. கே. 47 ரகத் துப்பாக்கிகளைக் கொண்ட ஒரு தனி போலீஸ் படையே அமைக்கப்பட்ட நிலையிலும் சந்தன மரக் கடத்தல் காரன் வீரப்பனைப் பிடிக்க முடியாத தற்கு என்ன காரணம்? தமிழகக் காவல்துறைத் தலைவர் துரை பதிலளிக்கிறார்...



# வீரப்பன் பிடிபடுவானா? போலீஸ் என்ன செய்கிறது?

"முக்கிய காரணம், அந்தப் பகுதியின் பூகோள அமைப்பு. சுமார் 180 கி. மீ. நீளமும், பத்து முதல் நாற்பது கி. மீ. வரையிலான அகலமும் கொண்ட வனப் பிரதேசம் அது. இதில் தேடுவதில் பல சிரமங்கள்... ஒரு சில தருணங்களில் போலீஸுக்கும் அவனுக்கும் இடையிலான இடைவெளி மிகக் குறுகிய அளவிலிருந்தும் கூட அவன் தப்பிப் போயிருக்கிறான் என்று தெரிய வருகிறது. இருப்பினும் அவனோடு இருந்த சுமார் 140 பேரில் இப்போது நாற்பது பேரே இருக்கலாம் என்று எண்ணுகிறோம். மற்றவர்கள் தமிழக, கர்நாடக போலீஸாரின் தேடுதல் முயற்சியில் கைதாகியிருக்கிறார்கள். ஒரு சிலர் தாக்குதலில் உயிரிழந்தும் இருக்கிறார்கள்...."

"அங்குள்ள ஆதிவாசி மக்கள் வீரப்பனைப் பிடிப்பதில் போலீஸுக்கு உதவவில்லையா?"

"அந்த மக்களுக்கு வீரப்பனிடம் பயம் கலந்த ஒருவித மரியாதை. அதோடு வீரப்பன் அவர்களைத் தனது சமூக விரோதச் செயல்களுக்குப் பயன்படுத்திக் கொண்டு அவர்களுக்கு ஏராளமாகப் பணம் கொடுத்தும் உதவியிருக்கிறான் என்பதால், முதலில் அவர்கள் ஒத்துழைக்கவில்லை. இப்போது அந்த மக்களின் மேம்பாட்டுக்காகத் தனித் திட்டங்களை அரசு செயல் படுத்தி வருவதால், போலீஸோடு அவர்கள் ஒத்துழைக்க ஆரம்பித்திருக்கிறார்கள்."

"வீரப்பனிடம் நவீன ஆயுதங்கள் உள்ளனவா?"

"லைசன்ஸ் இல்லாத நூறு நாட்டுத் துப்பாக்கிகளை நாங்கள் வீரப்பன் கோஷ்டியிடமிருந்து கைப்பற்றியிருக்கிறோம். ஆயினும் சமீபத்தில் அவன் சில நவீன ஆயுதங்களை வாங்கியிருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. போலீஸிடமிருந்து தப்பிப்பதற்காக ஆங்காங்கே சில கண்ணி வெடிகளையும் வைக்கிறான்!"

"வீரப்பனின் ஒரேயொரு படத்தைத் தானே எல்லாப் பத்திரிகைகளும் பயன்படுத்துகின்றன. அது எப்போது எடுக்கப்பட்டது?"

"முன்பொரு முறை அவன் பெங்களூரில் சந்தேகத்தின் பேரில் கைது செய்யப் பட்ட போது கர்நாடக போலீஸார் எடுத்த படம். அப்போது அவன் ஜெயிலிலிருந்து தப்பி விட்டான்."

"வீரப்பனின் மனைவி இப்போது எங்கே இருக்கிறார்? அவரைக் கொண்டு வீரப்பனைப் பிடிக்க முடியாதா?"

"அந்தப் பெண் மலைகிராமம் ஒன்றில் தான் இருக்கிறார். வீரப்பனைப் பிடிப்பதற்காக அந்தப் பெண்ணைச் சித்திரவதை செய்ய விரும்பவில்லை."

"வீரப்பனை எப்போதுதான் பிடிப்பீர்கள்?"

"இப்போது அந்தக்காட்டுப் பிரதேசத்தின் பல இடங்களில் போலீஸாரின் நிரந்தர முகாம்கள் அமைக்கப்பட்டுள்ளன. அங்கு ஒயர்லெஸ் வசதிகளைக் கூடச் செய்திருக்கிறோம். ஒரு பரந்த காட்டுப் பகுதியில் தனி மனிதன் ஒருவனைத் தேடிக் கண்டு பிடிப்பது அத்தனை சுலபமல்ல; என்றாலும் நிச்சயம் ஒரு நாள் பிடித்தே தீருவோம்!"

பேட்டி: **எஸ். சந்திரமௌலி**

# காற்று இருக்கையும் தண்ணீர்ப் படுக்கையும்!



• பிரதீப் ரங்கநாதன்

இளைஞரின் பெயர் பிரதீப் ரங்கநாதன்.

''முதலில் ராணுவத்துக்கு — முப்படைகளுக்கும் — தேவையானவற்றைத் தயாரிக்கத் தொடங்கினோம். மிதக்கும் கூடாரம் தேவை என்றார்கள். எழுபதடி உயரத்திலிருந்து, கடலில் விட்டால், மிக அதிகமான குளிர் அல்லது மிக அதிகமான வெப்பத்திலும் 24 மணி நேரம் நிலைத்து இருக்கக் கூடியது. ஒரு நாள் என்ன, இதன் வலிமையைச் சோதிக்க முப்பது நாட்கள் கூட கடலிலேயே அந்தக் கூடாரத்தை விட்டு வைப்போம்! அதனுள் குடிநீர், உணவுப்பண்டங்கள், முதலுதவிப் பெட்டி, சிக்னலிங் கருவிகள் எல்லாம் இருக்கும். அவற்றுக்கு ஒன்றும் நேராமல் இருக்கிறதா என்று பார்ப்போம்.'' என்றார் பிரதீப்.

''இதை அப்படியே மேலே இருந்தா தூக்கிப் போடுவீர்கள்?''

''கப்பலிலிருந்து வீசுவோம். வீசிய பிறகு உப்பவைக்கலாம். ஃபைபர்கிளாஸ் தயாரிப்பு இது. மீன் பிடி படகுகள், கோஸ்ட் கார்ட், விமானங்கள், கப்பற்படை, வணிகக் கப்பல்... என்று எல்லாருக்கும் இந்தக் கூடாரம் பயன்படும். வருடத்துக்கு ஒரு முறை இவற்றை சர்வீஸ் செய்து, பரிசோதித்துக் கொடுப்போம்.''

''நீங்கள் குறிப்பிட்ட துறையினர் எல்லாம் இத்தகைய மிதக்கும் கூடாரத்தைத் தயாராக விமானத்தில், படகில், அல்லது கப்பலில் வைத்திருக்க வேண்டும் என்று ஏதேனும் கட்டாயம் இருக்கிறதா என்ன?''

''இருக்கிறது!'' என்றார் பிரதீப். கிட்டத்தட்டச் சட்டம் போன்றது. இதற்கு Solas—83 என்று பெயர். (Safety of the life at Sea—83) என்பதன் சுருக்கம்தான்.) 182 நாடுகள் கூட்டாகக் கையெழுத்திட்ட ஒப்பந்தம். இந்தியாவும் கையொப்பம் இட்டிருக்கிறது.''

உப்ப வைக்கப்படும் இன்ஃப்ளேட்டபிள் படகுகள், கடற் படைக்குத் தேவைப்பட்டன. கடலில் மூழ்கும் 'நேவல் டைவர்'களுக்குத் தேவைப்பட்டன. மீட்புப் பணிகளுக்கும், தாக்குதலுக்கும் கூடத் தேவைப்பட்டன. காந்தத்தால் ஈர்க்கப்படாத அலுமினியம் போன்ற உலோகத்தால் இவை தயாரிக்கப்பட்டதால், எதிரிகளின் கண்ணி வெடிகளை நெருங்கி அழிப்பதற்கும் இவை பயன்பட்டன. இவை கனமே இல்லாதவை. மேலும் கடற்படைக்கும், விமானப்படைக்கும் லைஃப் ஜாக்கெட்டுகள் எனப்படும் உயிர் காக்கும் மிதப்பு உடைகள் தேவைப்பட்டன.... இவற்றை எல்லாம் இந்த நிறுவனம் தயாரிக்கத் தொடங்கியது.

''உப்ப வைக்கப்பட்ட வான மண்டலம் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?'' என்று கேட்டார் பிரதீப். ''இன்ஃப்ளேட்டபிள் பிளானடேரியம்! ஆசியாவிலேயே முதல் முறையாக நாங்கள்தான் தயாரிக்கிறோம். மனிதவள மேம்பாட்டு அமைச்சகத்தின் வேண்டுகோள்படி தயாரித்து, நவோதயா பள்ளிகளுக்கு எல்லாம் கொடுக்கப் போகிறோம். கனமே இல்லை. மடித்து எடுத்துக் கொண்டு போய்விடலாம். வெளியூர்களில் காண்பிக்கலாம்! 13 அடி உயரம்; 18 அடி சுற்றளவு. உள் பகுதி அலுமினியப் பூச்சுக் கொண்டது. புகைப்படங்களை ஓர் அவசரத்துக்கு டெவலப் செய்ய இதனை ''டார்க் ரூம்'' மாதிரியும் உபயோகித்துக் கொள்ளலாம்! இதற்கு ஜெனரேட்டர், புரொஜக்டர், கூடாரம் போன்ற அமைப்பு எல்லாம் சேர்ந்தே கொடுக்கிறோம். பக்கா பிளானடேரியம்!''

எண்ணெய், எரிவாயு கமிஷன், இந்திய உணவுக் கழகம் ஆகியவற்றுக்கு



• நீச்சல் பழக வைப்பர் ஜாக்கெட்.....

உப்பவைக்கப்படும் கூடாரக் கிடங்குகளைக் கூட இவர்கள் தயாரிக்கிறார்களாம்! ஐம்பத்தைந்தடிக்கு முப்பத்தைந்தடி அளவுள்ள பிரம்மாண்டமான கிடங்குகள். இவற்றை மின்விசிறி கொண்டு காற்று செலுத்தித்தான் உப்பவைக்கமுடியும். தேவையில்லாத போது சுருட்டி வைத்து விடலாம்.

''இதை எல்லாம் செய்து கொண்டிருக்கும் நீங்கள், எப்படி மெத்தை, சோபா செட்டுகள் போன்றவற்றைத் தயாரிக்க முற்பட்டீர்கள்?''

''பாதுகாப்புத் துறைக்கான பொருட்களின் தேவை, ஒரு குறிப்பிட்ட அளவில் நின்று விடுகின்றது. ஆனால் இந்த மூலப் பொருட்களைப் பற்றிய தொழில் நுட்பம் பல விதங்களில் பயன் தரும் என்று உணர்ந்தோம். எனவே தான் காற்றடைத்த சோபா செட்டுகள், தண்ணீர் அடைத்த படுக்கைகள், வீட்டுக்குள்ளேயே நீச்சல் குளம் என்று உற்பத்தி செய்ய ஆரம்பித்தோம்.''

• குழந்தைகளுக்கான நீச்சல் குளம்...



''தண்ணீர் அடைத்த படுக்கைகளா?''

''ஆமாம். ஆறு மாதத்துக்கு ஒரு முறை உள்ளே தண்ணீர் விட்டால் போதும். கூடவே ஒரு திரவமும் செலுத்தப்பட வேண்டும். இதை 'கண்டிஷனர்' என்போம். ருமாடிசம் உள்ளவர்களுக்கும், அறுவைச் சிகிச்சை செய்து கொண்டவர்களுக்கும் இது நல்ல பயனளிக்கும்!''

''எப்படி?''

''இந்தப் படுக்கையின் மீது படுக்கும் போது உடம்பின் அழுத்தம் ஒரே சீராக இருக்கும். உண்மையில், தண்ணீரில் மிதப்பது போன்ற உணர்வு இருக்கும்.''

''எந்த மருத்துவமனையிலாவது வாங்கியிருக்கிறார்களா?''

''சென்னையில் புகழ் பெற்ற சில மருத்துவமனைகள் தவிர, தனிப்பட்டவர்களும் நிறையப் பேர் வாங்கியிருக்கிறார்கள். பல புதிய மருத்துவமனைகள் ஆர்டர்கள் கொடுத்திருக்கின்றன. ஆஸிலேட்டிங் படுக்கையும் தயாரித்துக் கொடுக்கிறோம். படுக்கையைப் பல கட்டங்களாக நெடுகப் பிரித்து, ஒரு கட்டம் விட்டு இன்னொரு கட்டத்துக்குக் காற்று மாறி மாறி அலை மாதிரி பாயும் போது, உடம்புக்கு இதமாக இருக்கும். உடல் உபாதைகளால் உறக்கம் இல்லாமல் தவிக்கும் நோயாளிகளுக்கு இது வரப் பிரசாதம். தண்ணீர்ப் படுக்கையிலேயே, இதமான சூட்டுடன் இருக்க வேண்டுமென்றால், படுக்கைக்கு அடியில் மெலிதான அளவில் வாட்டர் ஹீட்டர் பொருத்திவிடலாம். ஒயரை தெர்மோஸ்டாட்டுடன் இணைத்து விட்டால், வெது வெதுப்பான சூட்டுடன் படுக்கை இருக்கும்!''

''சோபா செட்டுகள்?''

''காற்றடைத்து விடுகிறோம். இடம் குறைவானதாக இருந்தால், விருந்தாளி போனவுடன் காற்றை எடுத்து விட்டு, மடித்து வைத்துவிடலாம்! பல வித உருவங்களில் இவற்றைச் செய்கிறோம். அழகுக்கு அழகு. விலையும் அப்படி ஒன்றும் அதிகம் இல்லை.



• தண்ணீர்ப் படுக்கை

மற்ற சாதாரண சோபா செட்டுகளில் எத்தனை சௌகரியம் உண்டோ, அதெல்லாம் இதிலும் உண்டு.''

''தாங்குமா?''

''ஒரு சதுர அங்குலத்துக்கு 250 கிலோ எடை தாங்குமளவுக்கு உறுதியானது! தோட்டத்துக்கு, பிக்னிக்குக்கு, ஹாலுக்கு என்று பல வகைகளில் செய்கிறோம். மரத்தாலான சோபா செட்டுகளை விடக் குறைவான விலைக்கு இவை மக்களுக்குக் கிடைக்க வேண்டும் என்பதுதான் எங்கள் விருப்பம். இவற்றில் இன்னொரு வசதி: தீப்பிடிக்காது, துருப் பிடிக்காது, பூஞ்சைக்காளான் பிடிக்காது!''

**மே**லும் சில தயாரிப்புக்களை அடுக்கினார் பிரதீப்.

●● எண்ணெய், தண்ணீர் இவற்றை எடுத்துப் போக, பிரம்மாண்டமான பீப்பாய்கள். (வெளி நாடுகளில் ஆரஞ்சுப்பழ ரசத்தை எடுத்துப்போகப் பயன்படுத்துகிறார்களாம். ஈரோடு, திருப்பூர், கோவை, சேலம் நகரங்களில் தண்ணீர் எடுத்துப் போகப் பயன்படுத்துகிறார்கள்.)

●● வாட்டர் ப்ரூஃப் பைகள். சிமெண்டைக்கூட இந்தப் பைகளில் அடைக்கலாம். இன்று தண்ணீர் புகுந்து, சேதமடையும் சிமெண்ட் மூட்டைகள் கிட்டத்தட்ட 25 சதவிகிதம் என்று ஒரு கணக்கு சொல்லப் படுகிறது!

●● நகர்புறங்களில் பல மாடிக் கட்டடங்கள் கட்டுவோர் பயன்படுத்தத் தண்ணீர் டாங்குகள்.

●● ஒரே ஒரு முறை ஆட்டிவிட்டால், நிற்காமல் ஆடிக் கொண்டே இருந்து குழந்தையைத் தூங்க வைக்கும் தொட்டில்கள்....

''புதிதாக என்ன அறிமுகப்படுத்தப் போகிறீர்கள்?''

''இன்ஃப்ளேட்டபிள் ஷவர் ரூம்! உப்ப வைத்து விட்டால் குளியலறை தயார்! சீதோஷ்ண நிலை அறிய உதவும் பலூன்கள் என்று இப்படி நமது கற்பனையை விரிவாக்கிக் கொண்டே போகலாம்; அதற்கேற்ப உற்பத்தியும் செய்யலாம்! நைலான், பி.வி.ஸி, பாலியூரிதீன் போன்ற பொருள்களின் உபயோகம் அவ்வளவு விரிவானது'' என்றார் நெப்ட்யூன் இன்ஃப்ளேட்டபிள்ஸ் நிர்வாக இயக்குநர் பிரதீப் ரங்கநாதன்.

— சாருகேசி

---

மாதம் ஒரு தொகுதி



# சாத்தூர்த் தொகுதியை அலச வருகிறோம்!

**க**ல்கியின் 'மாதம் ஒரு தொகுதி' என்ற திட்டத்தின் கீழ் நடந்த எட்டாவது குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தொகுதி, காமராஜர் மாவட்டத்திலுள்ள சாத்தூர் தொகுதி.

இத்தொகுதியில் தமக்கு அடுத்தபடியாக வாக்குகள் பெற்ற ஜெ. அணி வேட்பாளர் ஆர். கோதண்டராமனைவிட 16,062 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றிருப்பவர் தி. மு. க. வைச் சேர்ந்த எஸ். எஸ். கருப்பசாமி.

தம்மைநம்பிக்கையோடுதேர்ந்தெடுத்த சாத்தூர்த்தொகுதிமக்களுக்குஎம்.எல். ஏ. என்கிற முறையில் எஸ். எஸ். கருப்பசாமி என்னென்ன செய்து கொண்டிருக்கிறார்? கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறாரா அல்லது மறந்து விட்டாரா?

சாத்தூர்த் தொகுதியைச் சேர்ந்த அனைவரும் தங்கள் எம். எல். ஏ. கருப்பசாமியிடம் கேட்க நினைக்கும் அத்தனை கேள்விகளையும் எங்களுக்கு எழுதியனுப்பலாம். அவர் செய்யும் வளர்ச்சிப் பணிகள் ஏதாவதிருந்தால் அவற்றையும் கூடவே தொகுதி வளர்ச்சிக்கான உங்கள் ஆலோசனைகளையும் எழுதலாம்.

நீங்கள் எழுதும் எல்லா விஷயங்களையும் எம். எல். ஏ. கருப்பசாமியிடம் எடுத்துச் சொல்லி விவாதிப்போம். தொகுதியை நேரடியாகச் சுற்றிப் பார்த்தும் உண்மைகளை ஆராய்வோம்.

கடைசியாக எங்கள் அனுபவங்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கல்கியில் கட்டுரையாக வெளியிடுவோம்.

**சாத்தூர் தொகுதியிலுள்ள வாசகர்களின் கடிதங்கள் கல்கி அலுவலகத்திற்கு வந்துசேர வேண்டிய கடைசித் தேதி: 29.9.90.**

உறையின் மேல் 'மாதம் ஒரு தொகுதி' என்று குறிப்பிட்டு உடனடியாக எழுதியனுப்புங்கள்.

— ஆசிரியர்




# ஸ்டாண்டர்ட் மோட்டார் தொழிற்சாலை 'ஸ்டார்ட்' ஆகுமா?



* ராஜன், திருமதி லட்சுமி ராஜன்.

இதோ திறக்கப் போகிறார்கள், இதோ திறக்கப் போகிறார்கள் என்று எத்தனையோ நாட்களாகச் சொல்லிக் கொண்டே இருக்கிறார்களேயொழிய, ஸ்டாண்டர்ட் மோட்டார் தொழிற்சாலை, இன்னும் மூடித்தான் இருக்கிறது.

நிதி நிறுவனங்கள், வங்கிகள், கடைசியாகத் தமிழக அரசு — என்று எல்லாருமே தங்கள் பங்கைச் செலுத்த ஒப்புக் கொண்ட பிறகு, ஏற்று நடத்தும் பொறுப்பை, எந்தத் தொழிலதிபர் ஏற்பார் என்ற பிரச்னையில் வந்து சிக்கிக் கொண்டு நிற்கிறது இப்போது!

நீண்ட காலமாக இங்கே பணி புரியும் ராஜன் என்பவரைச் சந்தித்தோம். காரணம், இந்தத் தொழிற்சாலை திறக்க ஒரு வழி பிறக்காதா என்று உருக்கமாக இவர் மனைவி லட்சுமி நமக்கு எழுதியிருந்த கடிதம்தான். இருவரையும் அவர்களது பெருங்களத்தூர் வீட்டில் பார்த்தோம்.

சொன்னார் ராஜன்:

''மூன்றாவது முறையாக மூடப்பட்டிருக்கிறது. 1958 இல் முதல் தடவை. ஒரே வாரத்தில் திறந்து விட்டார்கள். ஆனால் ஒரே நாளில் 150 பேரை அனுப்பி விட்டார்கள்! 1970 இல் இரண்டாவது முறையாக, ஸ்ட்ரைக்குக்குப் பிறகு மூடினார்கள். 1971 பிப்ரவரியில்தான் மறுபடி திறந்தார்கள்.''

''நிறுவனம் 82 லிருந்து 86 வரை நன்றாகத்தான் நடந்து கொண்டிருந்தது'' என்று குறுக்கிட்டார் லட்சுமி. ''அதுவும் திரு கார்த்திக் நாராயண் மானேஜிங் டைரக்டராகப் பொறுப்பு ஏற்றதிலிருந்து நன்றாகத்தான் நடத்தினார். ஊழியர்களுக்குக் கேட்டதெல்லாம் கிடைத்தது. தகராறு எதுவும் இல்லாமல் நடந்து கொண்டிருந்தது.''

''1985 இல், ஸ்டாண்டர்ட் — 2000 கார் உற்பத்தி செய்ய ஆரம்பித்தார்கள். இதற்கு மட்டுமே பத்துக் கோடி ரூபாய் முதலீடு செய்தார்கள். இரண்டு வருடங்களில் 1000, 1500 வண்டிகள் தயாராயின'' என்ற ராஜன், ''1000 ஆவது வண்டி தயாரானதும் 3000 தொழிலாளர்களுக்கும், தலா 4 ஸ்வீட்டுகள் கொடுத்துக் கொண்டாடினார்கள்!'' என்றார்.

''இப்போதைய நிலைமையைச் சொல்லுங்கள்!''

''இப்போது 1200 பேரைக் குறைக்க வேண்டும் என்கிறார்கள். இதனை எதிர்த்து ஜனநாயக மாதர் சங்கம், பெண்களை எல்லாம் கூட்டி வைத்து மறியலுக்கு ஏற்பாடு செய்வதாகச் சொன்னார்கள்,'' என்றார் லட்சுமி.

''எப்போது மூடப்பட்டது?''

''பிப்ரவரி 7, 1989. காலையில் அரசல் புரசலாக பாக்டரியை மூடிவிட்டார்கள் என்று யாரோ பேசிக் கொண்டிருந்தார்கள். உடனே பலரும் சைக்கிளை எடுத்துக் கொண்டு தொழிற்சாலைக்கு ஓடினார்கள். இரவோடு இரவாகப் பூட்டிவிட்டார்கள்! ஆனால் 'லாக்-அவுட்' அல்லது 'க்ளோஷர்' என்று எதுவும் போடவில்லை. 'ஆபரேஷன்ஸ் சஸ்பெண்டட்' என்று மட்டுமே போர்டில் இருந்தது. ஓகோ, ஒரு வாரம், பத்து நாளைக்கு வேலை நிறுத்தப்பட்டிருக்கலாம் போலிருக்கிறது என்றுதான் யாருக்கும் நினைக்கத் தோன்றியது. தொழிலாளருக்கு ஐந்து மாதச் சம்பளம் கொடுக்கப்பட வேண்டியிருந்தது. ஆனால் 88 இல் வேலையே இல்லாமல் இருந்த போதும் கூட, சம்பளத்தை ஒழுங்காகத் தந்து கொண்டுதான் இருந்தார்கள். எப்படித்தான் தந்து கொண்டிருந்தார்களோ என்று கூட நினைக்கத் தோன்றியது. ஏனென்றால் 500க்கும் மேற்பட்ட வண்டிகள் செய்கிற இடத்தில் பத்து வண்டிகள் கூடச் செய்ய முடியாதிருந்த நிலைமை... அதனால் தொழிற்சாலை மூடப்பட்டு விட்டதென்று எங்களால் நம்பவே முடியவில்லை.''

''எப்படி வாழ்க்கை நடத்துகிறீர்கள்?''

''பிராவிடெண்ட் பண்டு, எல். ஐ. சி. கடன்களை இந்த ஒரு வருடத்தில் மட்டும்

28000 ரூபாய் வரை வாங்கிவிட்டேன். வேறு என்ன செய்வது!'' என்றார் ராஜன்.

''வாலண்டரி ரிடையர்மென்ட் திட்டத்தில் ஒரு தொகை கொடுத்து, கிட்டத்தட்ட ஆயிரம் பேரைக் குறைத்துவிடும் திட்டம் என்ன வாயிற்று?''

''வி. ஆர். எஸ். திட்டம் இருக்கிறதா இல்லையா என்றே ஒரே குழப்பமாக இருக்கிறது'' என்றார் ராஜன்.

''மூடுவதற்கென்றே ஒரு தொழிலதிபர், ஒரு தொழிற்சாலையை ஏற்பாரா? நஷ்டம் வரும் என்று தெரிந்து எப்படி ஒரு முதலாளி இதை ஏற்பார்? திரு முத்தையா அப்படிச் செய்தது ஏன் என்று புரியவில்லை,'' என்ற லட்சுமி, தொடர்ந்து சொன்ன செய்தி, மிகுந்த நெகிழ்ச்சியை உண்டாக்கியது.

பத்து அதிகாரிகளை வீட்டுக்கு அனுப்பினார்களாம். அவர்களில் ஒருவர், திறக்கும், திறக்கும் என்று காத்திருந்தபடியே மரணம் அடைந்துவிட்டாராம். இரண்டு சின்னஞ்சிறு குழந்தைகள் அவருக்கு!

''1992 இல் நிறையப் பேர் ரிடையர் ஆகிறார்கள்... இது பெரிய பிராப்ளமே இல்லை. நாங்கள் எல்லாம் எவ்வளவோ விட்டுக் கொடுக்கத் தயாராக இருக்கிறோம்'' என்கிறார் ராஜன்.

''இவராவது பரவாயில்லை. ரிட்டயராக அதிக வருடங்கள் இல்லை. ஆனால் எத்தனை குடும்பங்கள் ஒரு வழி பிறக்காதா என்று ஏங்கிக் கொண்டிருக்கின்றன! சிரம தசையில் இருந்த போது 500 ரூபாய் சம்பளத்தில் குறைத்துக் கொள்ளுங்கள். யாரும் வீட்டுக்கு அனுப்பப்பட வேண்டாம் என்றார் கார்த்திக் நாராயண். அப்புறம் 150 ரூபாய் குறைத்துக் கொண்டால் போதும் என்ற அளவுக்கு இறங்கி வந்தார். அப்போது ஊழியர்கள் சம்மதிக்காமல் போனது கூடத் தவறோ என்று இப்போது நினைக்கத் தோன்றுகிறது!'' என்ற லட்சுமி, ''இந்தத் தொழிற்சாலை மூடப்பட்டதிலிருந்து எங்களுக்குப் பத்து வயது கூடிவிட்டமாதிரி இருக்கிறது. ஆனாலும் ஒரு வழி பிறக்காதா என்று பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறோம்!'' என்றார்.

இரண்டு பிள்ளைகள், ஒரு பெண், நூறு வயதைத் தாண்டிய மாமியார் என்று இந்தக் குடும்பம் தொழிற்சாலை திறக்கும் நாளை எதிர் பார்த்துக் காத்திருக்கிறது. இது போல் ஆயிரக்கணக்கான குடும்பங்கள்.

சாலைக்கு வந்த போது, தொழிற்சாலையின் முன்னால் இருந்த போர்டு ஒங்கத பாணியில் அறிவித்தது:

**FACTORY ZONE: GO SLOW!**

— **சித்தார்த்**

புகைப்படம்: **ரமணன்**



# உங்கள் பால்காரர் ரயிலில் பால் கொண்டு தருவாரா?

என் பால்காரர் தருவார்.

பிரயாணத்தின் போது சாப்பாடு மற்றும் பானங்கள் விஷயத்தில் நீங்கள் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். பால் திரிந்து விடும் அல்லது விரைவில் புளித்துப் போய் விடும். இது போன்ற சமயங்களில் அமுல் மில்க் பவுடர் டின் கையோடு கொண்டு செல்லுங்கள்.

அமுல் மில்க் பவுடர் கொண்டு நீங்கள் தூய்மையான, ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா எது வேண்டுமோ தயாரிக்கலாம்.




## அமுல் மில்க் பவுடர்

வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.



விற்பனைக்கு விடுப்போர் : குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெடிங் ஃபெடரேஷன் லிட்., ஆனந்த் 388 001

OPERATION FLOOD



# சுஜாதா பிலிம்ஸ் லிட்,

நிறுவனம்




# ஸ்ரீராம் டிரஸ்ட்

(அமுதசுரபி வெளியீட்டாளர்கள்)

இணைந்து அளிக்கும் சிறந்த நூல், நாவல்களுக்குப்

## பரிசு ரூ.20,000

1. 1989 ஆம் ஆண்டு வெளியான சிறந்த நூலுக்கு

## பரிசு ரூ.10,000

1989 ஆம் ஆண்டில் வெளியான சிறந்த நாவலுக்கு (நூல் வடிவில் 160 பக்கங்களுக்கு மேல்) ரூ.10,000ம் பரிசு அளிக்கப்படும். வெளியீட்டாளர்கள் அல்லது நாவலாசிரியர்கள் தங்கள் நூல்களை 29-9-90க்குள் ஸ்ரீராம் டிரஸ்ட் அலுவலகத்திற்கு வந்து சேருமாறு 6 பிரதிகளை அனுப்பி வைக்கவேண்டும்.

2. சிறந்த நாவலுக்கு (கையெழுத்துப்பிரதி)

## பரிசு ரூ.10,000

நாவல்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும். முழுப்பக்கத்தாளில் 300 பக்கங்களுக்கு மேற்படாமல் இருக்க வேண்டும். பரிசு பெறும் நாவல் 'அமுதசுரபி' மாத இதழில் தொடர்கதையாக வெளியிடப்படும். தெளிவாக எழுதப்பட்ட கையெழுத்து/அல்லது தட்டச்சு செய்யப்பட்ட பிரதிகள் ஸ்ரீராம் டிரஸ்ட் முகவரிக்கு 20-10-90க்குள் கிடைக்குமாறு அனுப்பவேண்டும்.

முழு விவரங்கள் 1-9-90 அமுதசுரபி இதழில் காணலாம்.




**ஸ்ரீராம் டிரஸ்ட்**

(அமுதசுரபி வெளியீட்டாளர்கள்)
த.பெ. 5043
145, லிங்கிச் செட்டி தெரு,
சென்னை-600 001.

ADWAVES/ST/4089




# சமாளி நைனா; சமாளி!

**பெட்ரோல் தட்டுப்பாட்டைச் சமாளிக்க, ஏரான வரி போட்டுக் காரின் விலையை எக்கச்சக்கமாக உயர்த்தும் ஐடியா ஜோராகத்தான் இருக்கிறது. நாமும் நம் பங்குக்குச் சில சமாளிப்பு யோசனைகளை அரசாங்கத்துக்கு அளித்து உதவுகிறோம்:**

●● தண்ணீர்த் தட்டுப்பாடு தண்ணீர் பட்ட பாடாகி நாம் தவிக்கிறோம் அல்லவா? எனவே அரசு, சோப்பு, ஷாம்பு, துண்டு முதலிய குளியலறைச் சாமான்களின் மீது வரி விதித்து விலையைச் சகட்டுமேனிக்கு உயர்த்தி விடலாம்! அப்புறம் குளிக்க நினைப்பதே 'குவைத்'தை நினைப்பது போலாகி, தண்ணீர்த் தட்டுப்பாடு சமாளிக்கப்படலாம்!

●● பல்ப் விலை, ஃபேன் விலைகளைக் கேட்டாலே 'ஷாக்' அடிக்க வேண்டும் சம்சாரிகளுக்கு. மின்சாரத் தட்டுப்பாட்டைச் சமாளிக்க வேறு வழியே இல்லை! இதனால் இன்னொரு ஆதாயம்: பனை ஓலை விசிறிகளுக்கு மவுசு அதிகரிக்க, குடிசைத் தொழிலுக்கு உதவியதாகும்!

●● பெட்ரோல் தட்டுப்பாடு என்றாலே கூடவே காஸ், கெரசின் தட்டுப்பாட்டையும் எதிர்பார்க்கலாம். எனவே முன்னெச்சரிக்கையாக அனைத்து அடுப்பு வகையறாக்களின் விலைகளையும் ஜனங்களுக்குக் கடுப்பு ஏற்படும் அளவுக்கு உயர்த்தி விட்டால், 'காஸ்' கெரசின் தட்டுப்பாடுகளைச் சமாளிப்பதுடன் கொசுறாக வரதட்சணைக் கொடுமைக் கொலைகளையும் தவிர்க்கலாம்!



●● கட்டில், மெத்தை இத்யாதி படுக்கையறைச் சாமான்களின் விலைகளை எட்டாத உயரத்துக்கு ஏற்றி விடுங்கள். பஞ்சணை, வரி விதிப்பு காரணமாக முள் படுக்கையாகும் போது, ஜனத்தொகைக் கட்டுப்பாட்டில் தட்டுப்பாடிருக்காது!



●● கடைசியாக ஒன்று. இப்படி காதைக் கொடுங்கள் சொல்கிறேன். முதலில் அரை டஜன் பேனாக்களையும் ஆறு டஜன் மைபுட்டிகளையும் வாங்கி வைத்துக் கொள்ளுங்கள். பேப்பர் தட்டுப்பாட்டைச் சமாளிக்கவும், இது மாதிரி ஏடாகூடமாய் எழுதுபவர்களைத் தவிர்க்கவும் அவற்றின் மீது எக்கச்சக்கமாக வரி விதிக்கப் போவதாக ஒரு தகவல்...

— **அகிலா கார்த்திகேயன்**













## 3வது டெஸ்ட்...




முதல் இன்னிங்ஸ்...



இரண்டாவது இன்னிங்ஸ்...



# கல்கி

1990 செப்டம்பர் 9
மலர் : 49 இதழ் 6
பிரமோதூத ஆவணி 24



## கொள்கைகளை விற்றுப் பிழைப்பவர்கள்!

மேலே, இந்த இதழின் தேதியைக் கவனியுங்கள். செப்டம்பர் 9. தொண்ணூற்றியொரு ஆண்டுகளுக்கு முன்னால் இதே தேதியில்தான் பிறந்தார், 'கல்கி' என்ற புனை பெயரில் பெரும் புகழ் பெற்ற ரா. கிருஷ்ணமூர்த்தி. அவர் மறைந்து முப்பத்தாறு ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆயினும் தமது சாதனைகளால் அமரநிலை அடைந்து, இன்றும் அவர் நம்மிடையே வாழ்கிறார். அந்தச் சாதனைகளைப் பல ஆண்டு ஆராய்ச்சிக்குப் பிறகு ''பொன்னியின் புதல்வர்'' என்ற தலைப்பில் 'சுந்தா' வாராவாரம் தொடர்ந்து கல்கியில் எழுதி முடிக்க இரண்டு வருஷங்கள் பிடித்தன! நூல் வடிவில் கிட்டத்தட்ட ஆயிரம் பக்கங்கள்! அந்தச் சாதனைகளிலெல்லாம் முக்கியமானது இன்றும் அவர் புனை பெயரைத் தாங்கி வெளிவந்து கொண்டிருக்கும் இந்தப் பத்திரிகை. இதனைத் தொடர்ந்து அவர் காட்டிய பாதையிலேயே கௌரவமாகவும் அச்சமின்றியும் நடத்திவர இறையருளை வேண்டுகிறோம்.

கல்கியின் பிறந்த நாளையொட்டியே செப்டம்பர் 11, 12 இல் மகாகவி பாரதியாரின் நினைவு நாள். பாரதி மணி மண்டபம் எழுப்பியதுடன் பாரதியின் நினைவு நாளில் அவரை ஆண்டுதோறும் போற்றி விழா எடுக்கப் பாரதியார் சங்கத்தையும் உருவாக்கினார், 'கல்கி.' இச்சங்கம் இப்போது பொள்ளாச்சி நா. மகாலிங்கம் தலைமையில் தொடர்ந்து சிறப்பாக நடைபெற்று வருகிறது. இந்த ஆண்டும் இச்சங்கம் வழக்கம் போல் இரண்டு நாள் விழா எடுக்கிறது. விழாவுக்குப் பெருந்திரளாகச் சென்னைவாசிகள் போகலாம். அப்படிப் போக முடியாதவர்கள், வெளியூர்களில் வசிப்பவர்கள், பாரதியாரின் நூல்களைப் படிக்கலாம். கவிதைகள் தவிர, பாரதியாரின் கட்டுரைகள் அடங்கிய நூலையும் ஒவ்வொரு தமிழனும், மொழி பெயர்ப்பில் ஒவ்வோர் இந்தியனும், முக்கியமாக ஒவ்வோர் அரசியல்வாதியும் படிக்க வேண்டும். அப்படிப் படித்தால், 'என்னென்ன தவறுகளை நாம் செய்து கொண்டிருக்கிறோம்; எப்படி நடந்து கொண்டால் பாரத தேசத்தை வெகு எளிதாக முன்னேற்றலாம்' என்ற விஷயங்கள் புரிந்து போகும்.

இந்தக் கட்டுரைகளில் பாரதியை ஒரு ஞானியாக, அரசியல்வாதியாக, பொருளாதார நிபுணராக, கல்வியாளராக, சீர்திருத்தவாதியாக, கலைஞராக இன்னும் பலவாறாகவும் காண்கிறோம்.

''நாத்திகன் கூட இஷ்ட தெய்வம் இல்லாவிட்டாலும் தியானம் செய்யலாம்'' என்று கூறும் பாரதி, 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்ற குறளை மேற்கோள் காட்டி, தியானத்தின் மூலம் எப்படி நாட்டையே மேம்பாடடையச் செய்ய முடியும் என்பதை விளக்குகிறார். இன்னும் தமிழில் விஞ்ஞான விஷயங்கள் போதிப்பது பற்றியும் தேசியக் கல்வி குறித்தும் பாரதி கூறுவன யதார்த்த நோக்கில் அமைந்து பெரும் பயன் தரத்தக்கவை; சுலபமாகப் பின்பற்றக் கூடியவை. இவற்றை நமது கல்வியாளர்கள் கவனிக்க வேண்டாமா?

தமிழிசை பற்றிய அவரது வன்மையான வாதங்களும், சோஷலிஸத்தை ஏற்றாலும் செல்வத்தை வன்முறையில் பறித்து விநியோகிப்பதை எதிர்க்கும் அவரது தார்மிகப் போக்கும் ஒருபுறமிருக்க, குனிந்தால் வரி, நிமிர்ந்தால் வரி, நின்றால் வரி, உட்கார்ந்தால் வரி, ரோட்டு வரி, காட்டு வரி, வீட்டு வரி, மோட்டு வரி என்று அடுக்கிக் கொண்டே போய் எள்ளி நகையாடுகிற வரிகள் இன்றைக்கும் இங்கு பொருந்துவனதாம். ஆனால் இவற்றையெல்லாம் நமது ஆட்சியாளர் ஏற்றுச் சரி செய்யப் போவதில்லை. காரணத்தைப் பாரதியின் சொற்களிலேயே காணலாம்: ''கொள்கையற்ற மானிடப் பதராகவோ அல்லது கொள்கை இருந்தும், அதன்படி நடக்காத மானிடப் பதராகவோ இருந்தால் பாதகமில்லை. இவர்களால் நாட்டுக்குப் பெருங்கேடு இல்லை. ஆனால் கொள்கைகளையே விற்று ஜீவிக்கும் ஜாலவித்தைக்காரர்கள் இருக்கிறார்களே, அவர்கள்தான் தாங்கள் வசிக்கும் நாட்டின் குடலைத் தின்னும் அரிபூச்சிகள்'' என்கிறார் பாரதி. இத்தகையவர்கள்தானே நம்மை ஆண்ட, ஆள்கிறவர்களிலே அதிகம்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# மழுங்கிய ஷார்ப்னர்

# மழுபோன்ற ஷார்ப்னர்

எல்லா முக்கியமான கடைகளில் கிடைக்கும்.

அறிமுகப்படுத்துகிறோம் — க்ரிஸ்டல் நைஃப்-கம்-ஸிஸ்ஸர் ஷார்ப்னர். தொன்று தொட்டு வரும் சாணை பிடிக்கும் முறை மறைந்து விட்டது. பளபளப்பான, மிருதுவான மற்றும் கையடக்கமான க்ரிஸ்டல் ஷார்ப்னர் இதோ. உங்கள் சமையலறையில் எந்த ஒரு மூலையிலும் மிடுக்காக அமர்ந்திருக்கும். உங்களுக்கு எப்பொழுது தேவையோ அப்பொழுது உபயோகமாகும். (சாணை பிடிப்பவருக்காகக் காத்திருக்க வேண்டாம் அல்லது அவர் வந்து விட்டால் கீழே விரையத் தேவையில்லை). க்ரிஸ்டல் ஷார்ப்னர் உடையாது மற்றும் உறுதியான பிடிப்பை அளிக்கிறது. இரண்டு அறைகளைக் கொண்டது — கத்திகளை சாணை பிடிக்க ஒன்று மற்றது கத்தரிக்கோலுக்காக. முன்னாலிருக்கும் தனிச்சிறப்பான சாணைக்கல் துல்லிய ஃபினிஷை அளிக்கிறது. க்ரிஸ்டல் ஷார்ப்னர் உபயோகியுங்கள். சில நிமிடங்களிலே உங்கள் நகரில் மிக்க கூர்மையான கத்திகளின் மற்றும் கத்தரிக் கோல்களின் உரிமையாளர் ஆவீர்கள்.





**CRYSTAL®**

**MODERN KITCHEN AIDS.**

*The joy in your kitchen.*

க்ரிஸ்டல் மார்கெட்டிங் சர்வீஸஸ், 240 ஆதர்ஷ் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், ஸஹார் ரோடு, அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 099. தொலைபேசி : 634 9916

MAKHIJA-2134 TAM

# மை டியர் மார்த்தாண்டன்



**இந்தப் படத்தை 'எட்டி மர்ஃபி' ரசிகர், .ரவி (கல்லூரி மாணவர்) விமர்சிக்கிறார்...**



ரவி

ஆப்பிரிக்க நாட்டு இளவரசன் ஊர் உலகமே தெரியாமல் அரண்மனைக்குள்ளேயே ராஜபோகமாய் வளர்ந்து வருகிறான். அவனுக்குப் பல் தேய்த்து விட, குளிப்பாட்டி விட, டிரெஸ் போட்டு விட... இப்படி சகலத்துக்கும் பணியாட்கள்! இது பிடிக்காமல் இளவரசன் அரசனிடம் (அப்பாவிடம்) சொல்லி விட்டு அமெரிக்காவில் நியூயார்க்குக்கு வருகிறான் — ஏழைகளுடன் உழைத்து வாழ்கிறான். அங்கே தன்னை நேசிக்கிற ஒரு பெண்ணைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்ள எண்ணுகிறான். சில காலம் சென்று இளவரசனைத் தேடிக் கொண்டு அரசன் மெய்க்காவலருடன் வர, இளவரசன் ஏழையாக வாழ்வதும் ஒரு பெண்ணைக் காதலிப்பதும் தெரியவருகிறது. முதலில் அரசன் அதிர்ச்சி அடைந்தாலும் பிறகு சம்மதம் தெரிவிக்க, ஏழைகளின் துயரம் உணர்ந்த இளவரசனுக்கு ராஜ்ய பாரம், இல்வாழ்க்கை இரண்டும் கிட்டுகிறது. இது எடி மர்ஃபீ நடித்துப் புகழ்பெற்ற படமான 'கம்மிங் டு அமெரிக்கா' வின் கதை. இதை அப்படியே காட்சிக்குக் காட்சி காப்பி அடித்து ''மை டியர் மார்த்தாண்டன்'' என்று புது லேபில் ஒட்டியிருக்கிறார் டைரக்டர் பிரதாப் போத்தன்.

ஆரம்பத்தில் அரண்மனையின் ஆர்ப்பாட்டங்களில் காமடி பண்ணுகிறேன் பேர் வழி என்று 'போர்' அடிக்கிறார்கள். ஐடியா (கவுண்ட)மணி வந்த பின்புதான் ஓரளவு கலகலப்பாகிறது. பிரபுவின் உதவிக்கு வருகிற தோழனின் சின்னத் தாடியை வண்டாக நினைத்துக் கவுண்டமணி உஸ்... உஸ் என்று விரட்டுவது போன்ற சில காட்சிகள் நம்மையும் மீறிச் சிரிக்க வைத்து விடுகின்றன.

பிரபு கூட எட்டி மர்ஃபியை இமிடேட் செய்து நடித்திருக்கிற மாதிரி தெரிகிறது. பிரபுவைத் தேடிக் கொண்டு ராஜா எஸ். எஸ். சந்திரனும் ராணி கோவை சரளாவும் மெய்க்காவலர்களுடன் குதிரை பூட்டிய தேரில் மவுண்ட் ரோடில் பவனி வருகிற காட்சி பார்ப்பதற்குக் கொஞ்சம் வித்தியாசமாக இருக்கிறது. (ஆங்கிலத்தில் காரில் தேடுகிறார்கள்; இங்கு தேர்!)

பிரபு தனக்குப் பெற்றோர்கள் பார்த்த பெண்ணைத் தனி அறைக்கு அழைத்துப் போய்ப் பேசுகிற போதும், ''நாய் மாதிரி குரைத்துக் கொண்டு (ஆங்கிலத்தில் புறா மாதிரிக் கூவிக் கொண்டு) ஓடு'' என்று கூறுகிற போதும் வசனங்களைக் கூட அப்படியேதான் மொழி மாற்றியிருக்கிறார்கள். பல காட்சிகளில் 'கம்மிங் டு அமெரிக்கா' படத்தில் பயன்படுத்திய அதே மாதிரி காஸ்ட்டியூம்களையே பயன்படுத்தியிருக்கிறார்கள்.

தெளிவான ஒளிப்பதிவும், இளையராஜாவின் பின்னணி இசையும் இந்தப் படத்துக்குப் பிளஸ் பாயிண்ட்ஸ்! 'கம்மிங் டு அமெரிக்கா' படத்தில் டக்டக்கென்று காட்சிகள் நகர, எடிட்டிங் உதவிய அளவில் பாதி கூட இந்தப் படத்தில் உதவவில்லை. காப்பி அடித்ததுதான் அடித்தார்களே, 'கம்மிங் டு அமெரிக்கா' வுக்கு இருக்கிற ஒரு தனித் தன்மையையும் சேர்த்துக் காப்பி அடித்திருந்தால் தமிழில் ஒரு வித்தியாசமான படம் வந்திருக்கும். அதை விட்டு விட்டு இதிலும் நாலு பாட்டு, ஃபைட்டு என்று வழக்கமான பார்முலாவைப் புகுத்தி அதில் மெஜஸ்ட்டிக்காக எடுத்திருந்த காட்சிகளையெல்லாம் கேலிக் கூத்தாக்கி விட்டார்கள்.

தொகுப்பு: **எஸ். பாலு.**



* எடிட்டிங்கா, சென்ஸாரா?

# உபேந்திரா தொடர்பாக உலாவரும் பிரச்னை பற்றி?

* எஸ். யோகலிங்கம், சென்னை.

**? சமீபத்தில் பார்த்து ரசித்த டி.வி நிகழ்ச்சி...?**

! நாடாளுமன்றத்தில் திமிலோகப் பட்டுப் போன குலமஞ்ச் நிகழ்ச்சிதான். ஃபெர்னாண்டஸை மடக்கிய விதம்... எடிட்டிங் செய்த பிறகும் அவரைத் திணற அடிப்பதாகத்தான் இருந்தது. மந்திரி டிராக் மாறும் போதெல்லாம் கரன் தாபர் 'மினிஸ்டர்' என்று அவரை அழைத்து இடித்தாரே... அந்தத் தைரியத்துக்காகவே பாராட்டலாம்!

* கு. சிவகுமார், வாய்மேடு.

**? அ. தி. மு. க. எம். எல். ஏக்கள் சட்ட சபைக்குக் கைக்குட்டையால் வாயைக் கட்டிக் கொண்டு வந்தது பற்றி...?**

! வழக்கமாக ஜெயலலிதா முன்பாக வாயைக் கட்டிப் பழகிப் போனவர்களுக்கு இது புதுமை இல்லை...

* கே. ராஜபாலு, சேலம்.

**? மூன்றாவது டெஸ்டிலாவது இந்திய அணி தன்மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளுமா?**

! புரட்டிப் போட்டு, இங்கிலாந்து அணி தன்மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளுமா என்று கேட்கும்படியல்லவா ஆகிவிட்டது! எப்படியோ டிராவில் முடித்து டெஸ்ட் தொடர் வெற்றியைத் தங்களுடையதாக்கிக் கொண்டு விட்டனர் இங்கிலாந்து அணியினர். ஆட்டம் டிரா ஆனாலும் நினைவில் நிற்கும்படியான பல சாதனைகள் நிகழ்ந்துள்ளன. (உம்). வெங்சர்க்கார், ரவி சாஸ்திரி அபார காட்சுகள்; கூச், கோவர், சாஸ்திரி, கபிலின் பிரமாத பாட்டிங் இத்யாதி. இதையெல்லாம் விடப் பெரும் சிறப்பு, ''வாஸ்ஸனின் பந்து வீச்சைக் கொஞ்சம் கவனித்து அபிவிருத்தி செய்ய உதவுங்கள்'' என்று காப்டன் அஷார் கேட்டுக் கொள்ள, இங்கிலாந்தின் புகழ்பெற்ற பழம்பெரும் பௌலரான பெட்ஸர் கொஞ்சமும் தயக்கமின்றி வாஸ்ஸன் தமது திறமையை அதிகரித்துக் கொள்ள அருகிலிருந்து உதவியதாகும். டெஸ்ட் தொடர் நடக்கும் போதே இப்படி பிராக்டிஸில் உதவிய பெருந்தன்மையை எவ்வளவு போற்றினாலும் தகும். தூர்தர்சன் இந்த டெஸ்ட் தொடரின் ஹைலைட்ஸ் தொகுப்பையாவது தருவித்து ஒளிபரப்பலாம்.

* கிஷோர், திருச்சி.

**? ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் குலமஞ்சில் தெரிவித்த சில கருத்துக்களுக்கு உபேந்திரா 'கை' சொன்னதால் உலா வரும் பிரச்னை பற்றி...?**

! ''முன் பக்கம் பார்த்தால் ராவுத்தர் குதிரை; பின் பக்கம் பார்த்தால் செட்டியார் குதிரை'' என்பது போல், ''இது எடிட்டிங்கா? சென்ஸாரா?'' என்பதில் பிரச்னை எழுந்திருக்கிறது! ''எடிட்டிங் என்பது சென்ஸார் ஆகாது'' என்ற உபேந்திராவின் வாதத்தில் ரொம்ப நியாயம் உண்டு. ''ஃபெர்னாண்டஸ் அமைச்சரவைக்குத் தொடர்பில்லாத விஷயங்களைத்தான் நீக்கினேன்; ரயில்வே அமைச்சகத்துக்குப் பாதிப்பான அம்சங்களைக் கூட விட்டு வைத்திருக்கிறேன். எனவே, இது எடிட்டிங்தான்'' என்கிறார் உபேந்திரா. அவர் கூறுவது சரியே என்றாலும், 'ஃபெர்னாண்டஸின் அமைச்சரவைக்குத் தொடர்பான விஷயங்கள் மட்டுமே நேருக்கு நேர் சந்திப்பில் இடம் பெற வேண்டும்' என்ற வரைமுறையை நிகழ்ச்சியைப் படம்பிடிக்கு முன்னரே உருவாக்கி, அனைவரையும் எச்சரித்திருக்க வேண்டும். 'இஷ்டப்படி கேளுங்கள்; பதில்களைப் பெறுங்கள்' என்று கூறி அனுமதித்த பிறகு, திடீரென்று விழித்துக் கொண்டு கை வைக்கும் போது, அது



* டிரேட் மார்க் முத்திரை!



* நினைவினார்!

சென்ஸார் ஆகி விடுகிறது என்பதும் உண்மையே!

* கே. ஆர். தேவேந்திரன், வேலூர்.

? இப்போது வரும் சில திரைப்படங்களின் பெயர்கள் சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் இருக்கின்றனவே...?

! சொல்லிக் கொடுத்து விட்டீர்களே... பார்த்துக் கொண்டே இருங்கள், அடுத்தாற் போல் ஒரு திரைப்படம் ''சம்பந்தமில்லாச் சம்பந்தம்'' என்ற தலைப்பிலேயே வெளி வரப் போகிறது!

* எஸ். எஸ். ஆறுமுகம், அருப்புக்கோட்டை.

? வி. பி. சிங்கின் பலம் எது? பலவீனம் எது?

! 'மண்டல் கமிஷன் அறிக்கையை அமுல் படுத்துவதாக அவர் அறிவித்ததற்குக் காரணமே கருணாநிதிதான்' என்பதாகக் கூறி, இங்கே இவருக்குப் பலர் பாராட்டுக்களைக் குவிப்பதைப் பார்க்கும் போது, பிறருடைய கருத்துக்களைக் கேட்டுக் கொள்வது





வி. பி. சிங்கின் பலம் என்றால்; அப்படிக் கேட்டுக் கொண்ட பிறகு சிந்தித்துச் சுயமாக நல்ல முடிவை எடுக்காமல் யோசனைகளை அப்படி அப்படியே ஏற்பது அவரது பலவீனம் என்றும் கருதத் தோன்றுகிறது. பலரது கருத்துக்களைத் தலைவர் கேட்டுக் கொண்டால் போதாது; யதார்த்தங்களோடு தொடர்பு படுத்திச் சீர்தூக்கிப் பார்த்துச் சிறந்த முடிவுக்கு வர வேண்டும். மண்டல் கமிஷன் அறிக்கையை அப்படியே ஏற்பதா, சில மாற்றங்களைச் செய்வதா; தோழமைக் கட்சிகளைக் கலந்தாலோசிப்பதா என்றெல்லாம் நிதானித்து யோசித்திருந்தால், இன்று நாட்டில் நிலவும் ஒரு கொந்தளிப்பான நிலையைப் பிரதமர் தவிர்த்திருக்க முடியும்.

* ஆர். ரமேஷ், கம்பம். *

? ஆட்டோ சங்கர் தப்பி விட்டதற்காக முதல்வர் பதவி விலக வேண்டும் என்கிறாரே, வாழப்பாடியார்?

! எடுத்ததற்கெல்லாம் கலைஞரின் ராஜினாமாவைக் கோருவது அவர் பழக்கம்.



* கூறாததற்கு நன்றி!



* வழக்கமான கோரிக்கை

அப்படிப் பார்த்தால் ராஜீவ் காந்தி தமது ஐந்தாண்டு ஆட்சிக் காலத்தில் ஐம்பது தடவையாவது ராஜினாமா செய்திருக்க வேண்டும். ஒரு தவறு நடக்கும் போது ஆட்சியில் இருப்பவர் தார்மிக அடிப்படையில் ராஜினாமா செய்வது என்பது வேறு; அவரது ராஜினாமாவைப் பிறர் கோருவது என்பது வேறு. ராஜினாமாவைக் கோருகிறவர் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நிரூபிக்கக் கூடிய பெரிய குற்றத்தை ஆட்சியில் இருப்பவர் செய்திருக்கிறார் என்று நிதர்சனமாகத் தெரிந்தாலொழிய அந்தக் கோரிக்கையை எழுப்பக் கூடாது. ஆனால் இந்த ஜனநாயக மரபுகளையெல்லாம் இன்று யார் யோசித்துப் பார்த்து நடந்து கொள்கிறார்கள்? எல்லாமே கேலிக் கூத்தாகி வருகிறது. தொட்டதற்கெல்லாம் ராஜினாமா என்றால் ஆட்சி எப்படி நடக்கும்?

* ஆ. புகாரி, தக்கோலம்.

? 'பிரதமர் பதவிக்கு வி. பி. சிங்கை விட தேவிலாலே மேல்' என்று சந்திரசேகர் கூறுகிறாரே?

! 'தேவிலாலை விட சந்திரசேகர் மேல்' என்று கூறாமல் விட்டதற்கு நன்றி!

* என். பாபு, திருச்சி.

? 'ஆட்டோ சங்கர் தப்பியதையொட்டித் தமிழ்நாட்டில் சட்டம் ஒழுங்கு பராமரிப்பு அமைப்புக்கள் சீர்கெட்டுள்ளன' என்று குற்றம் சாட்டினால், பதிலுக்கு, 'காங்கிரஸ் ஆளும் மாநிலங்களில் நிலைமை இதைவிட மோசம்' என்கிறாரே, முதல்வர்?

! 'ஏண்டா ஃபெயில் மார்க் வாங்கியிருக்கிறாய்?' என்று தந்தை கேட்டால், 'இதை விடக் குறைவாக மார்க் வாங்கியிருப்பவனைக் காண்பிக்கட்டுமா?' என்று மகன் பதிலுக்குக் கேட்பது போலப் பேசுவது கலைஞரின் டிரேட் மார்க். ஆனால் ஒன்று; அந்த டிரேட் மார்க் முத்திரையையும் அவர் கலங்கலின்றித் தெளிவாகத்தான் போடுவார்!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

ஆர். ரமேஷ்,
36, அப்பாவு பிள்ளை தெரு,
கம்பம் — 626 516.

## COUNT DOWN — 18

"ஷ்... சத்தம் போடாமல் என்னுடன் வா. இல்லாவிட்டால் நீயும் பிழைக்க மாட்டாய். உன் அண்ணனும் பிழைக்க மாட்டான்."

அச்சுதனின் மிரட்டும் குரல் சாந்தினியின் காதருகே சீங்காரம் செய்தது.

மேனேஜரை அருகில் விளித்து, அவசரமாகப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, அச்சுதனின் பின்னே மாருதி வேனில் ஏறியதிலிருந்து அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். கண்களில் பயம்.

அமீர் ஜவஹருக்கு என்ன ஆயிற்று?

பிஸினஸ் விஷயமாக ரகசிய பேப்பரை யாரிடமிருந்தோ வாங்க வேண்டும் என்று அவனை அனுப்பிய போதே அவளுக்குப் பயம் வந்து விட்டது. சாந்தினி சௌக்கில் இந்த சந்தனக்கீற்றுக்காரன் தன்னைத் தொடர்ந்த போது அது வளர்ந்திருந்தது. இப்போது அமீர் ஜவஹருக்கு ஆபத்து என்கிறானே!

வேனில் ஏறியதும் அச்சுதன் துப்பாக்கியை டாஷ் — போர்டில் வைத்து விட்டு ஸ்டியரிங்கைப் பிடித்த போது இறங்கித் தப்பித்து விடலாமா என்று ஒரு சபலம் வந்தது. அப்புறம் அண்ணனைப் பற்றித் தெரியாமலே போய்விடும். அண்ணனுக்கு என்ன ஆயிற்று என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

மாருதி வேன் திலக் நகரை நோக்கி விரைந்தது.

"இறங்கு சாந்தினி" என்றான் அச்சுதன், புன்னகையுடன். "உன் அண்ணன் இந்த வீட்டில்தான் காத்திருக்கிறான். வா."

சாந்தினி அந்தச் சிறு வீட்டிற்குள் பிரவேசித்தாள். அவள் உள்ளே நுழைந்ததும் அச்சுதன் கதவைச் சாத்தினான். கூடத்தின் ஓர் ஓரத்தில் சக்கரவண்டியில் அமர்ந்திருந்த கர்னல் அருள்தாஸ், அவளைத் தலையில் இருந்து பாதம் வரை கூர்ந்து நோக்கினார்.



''எங்கே என் அண்ணன்?''

கர்னலின் கண்கள் மூடியிருந்த ஓர் அறைப்பக்கம் திரும்பின.

சாந்தினி அந்த அறைக்கதவைத் திறந்தாள். நடுவில், ஒயர் நாற்காலியில் உட்கார்ந்திருந்த அமீர் ஜவஹரைக் கண்டாள். பதறிக்கொண்டு உள்ளே ஓடினாள்.

''அவர்கள் பேசட்டும் அச்சுதன். சாந்தினியிடம் நீயும், நானும் பேசுவதை விட அமீர் ஜவஹர் பேசுவதுதான் நல்லது.''

சக்கரவண்டி நகர்ந்து திரும்பியது. அச்சுதன், அமீர் ஜவஹரும் சாந்தினியும் இருந்த அறைக்கதவைச் சாத்தினான்.

பன்னிரண்டு நிமிடங்களுக்குப் பிறகு அந்த அறைக்கதவு திறந்தது. உறைந்த விழிகளுடன் சாந்தினி வெளியேறினாள். அவளுக்குப் பின்னால் அமீர் ஜவஹர்.

''என் அண்ணனை பாகிஸ்தானுக்குத் துரத்துவது நீங்கள் தானா கர்னல்?''

''ஸாரி டியர். அமீரை உன்னிடமிருந்து பிரிக்க வேண்டும் என்பது என் ஆசையில்லை. எங்கள் தொழில் அப்படி. இதில் பாசத்திற்கு அவ்வளவாக இடமில்லை. கவலைப்படாதே. ஜவஹர் சீக்கிரமே திரும்பி விடுவான்... ஜவஹர்! அவளை அழைத்துப் போ. அப்பாவைக் காட்டு. அதிக நேரம் வீணாக்காமல் விட்டிற்குப்போ. மணிமாறனுக்கு உடனே தகவல் கொடுத்துவிட்டுக் கிளம்புவதற்குத் தயாராகு.''

அமீர் ஜவஹர் சாந்தினியின் தோளைப் பற்றி மெல்ல வெளியே நடத்தினான்.

சுவர்களில் வெளிர் நிற டிஸ்டெம்பர் பூச்சு, வெளிச்சம் பட்டு எதிரொளித்தது. மெல்லிய மெத்தை விரித்த கட்டிலில் அமீர் ஜவஹர் உட்கார்ந்து ஒரு புத்தகத்தைத் திறந்து வைத்திருந்தான். அவனைச் சுற்றிலும், மிக மெல்லிய ப்ரோமைட் காகிதங்களில் அச்சான புகைப்படங்கள். ஒரு பிளாஸ்டிக் டியூபில் பசை.

''என்ன செய்கிறாய் அண்ணா?''

''இந்தப் போட்டோக்களை பாகிஸ்தானுக்குள் நான் ரகசியமாக எடுத்துப்போக வேண்டும் சாந்தினி.''

சாந்தினி அவனை நெருங்கிக் கட்டிலில் கையூன்றிப் பார்த்தாள்.

புத்தகத்தில் தடித்த தாள்கள்.

''இங்கே பார். இது பக்கம் நம்பர் ஒன்று. அதன் பின்புறம் பார். எதுவும் அச்சாகவில்லை. அதே போல் இரண்டாம் பக்கத்தின் பின்புறமும் எதுவும் அச்சாகவில்லை. அச்சாகாத பக்கங்களுக்கு நடுவில் போட்டோவை வைத்து, முனைகளில் பசை தடவி இப்படிச் சரியாக அழுத்தி விட்டால்....''

ஒன்றாம் பக்கமும், அதன் பின்புறம் இரண்டாம் பக்கமும் அச்சானது போல் இப்போது தோன்றியது. இரு பக்கங்களுக்கிடையில் ஒரு போட்டோ மறைந்து விட்டது.




**கட்சி மாறிய ஒற்றனை உரிய முறையில் பயன்படுத்திக் கொள்வது என்பது சுலபமான வேலை அல்ல. அவனைப் பிடிப்பதற்கும், தோழனாக்கிக் கொள்வதற்கும் செயல்படுத்தும் திட்டங்களை விடவும் கடுமையான சோதனை அவனை உபயோகமானவனாக்கிக் கொள்வது. தொலைநோக்குப் பார்வையும், அவனை எந்த முறையில் சிறப்பாகப் பயன்படுத்துவது என்ற கூரிய சிந்தனையும் இருந்தால் தான் இந்தச் சவாலான காரியம் சாத்தியமாகும்.**

**— ஹெச். ஹெச். ஏ. கூப்பர்**

அமீர் ஜவஹர் மிகக் கவனமாக அடுத்தடுத்த பக்கங்களில் போட்டோக்களை ஒளித்து வைக்கலானான்.

''நீ போய்த்தான் ஆகவேண்டுமா அண்ணா?'' சாந்தினியின் குரல் நடுங்கி வந்தது.

''அப்பாவைப் பார்த்தாயே சாந்தினி... அவரையும் அம்மாவையும் நாசமாக்கியவர்களைப் பற்றி அப்பா சொன்னதை நீ கேட்கவில்லை?''

அப்பா! திடீரென்று இருபதாவது வயதில் அறிமுகப் படுத்தப்படும் அப்பா. எடுத்து வீசப்பட்ட பூச்சரம் போலக் கட்டிலில் கிடந்த எலும்புக் கூட்டு அப்பாவை இதற்கு முன் அவள் தரிசித்ததில்லை.

பார்த்ததெல்லாம் மேஜர் நாஸர்தான். கல்யாணம் செய்து கொள்ளாத மேஜர் நாஸர். முரட்டு மீசையும், உறுதியான பற்களும், சீரான மூக்கும், நெற்றியின் குறுக்கே படுத்த சிந்தனைக் கோடுகளுமாய் மேஜர் நாஸர்.

அதற்குப் பிறகு அவளுக்குத் தெரிந்ததெல்லாம் அமீர் ஜவஹர்தான்.

இஸ்லாமாபாதின் வெளிச்சம் நிறைந்த தெரு வீட்டின் வெளிப்படியில் அந்தச் சிறுமி உட்கார்ந்து அழுகிறாள். பிரித்துப் போட்ட கூந்தல் நூல் சிடுக்காய் அவள் முகத்தை

அஞ்சனா மைக்கேல் ராஜ்

அவிழ்த்து மறைத்திருக்கிறது.

''சாந்தினி. ஏன் அழுகிறாய்?' — அவளை மார்போடு அணைக்கிறான் அவள் அண்ணன்.

சிறுமி, கிழவியை நடுங்கும் விரலால் சுட்டிக் காட்டுகிறாள்.

'ஏன் நிதி, வலிக்காமல் வாரிவிடக் கூடாது?'

'வந்து விட்டான் பார் பெரிய பாத்ஷாஹ். உன் அழுமூஞ்சித் தங்கைக்கு எவன் வாரி விடுவான்?'

வேலைக்காரக் கிழவி வீசியெறியும் சீப்பை அவன் பொறுக்குகிறான்.

தங்கையை ஒரு படி இறக்கி உட்கார வைத்து அவள் கூந்தலில் விரல் விட்டுச் சிடுக்கை வலிக்காமல் பிரித்து விட்டுச் சீப்பால் மிருதுவாக வாரி விடுகிறான்.

கண்ணீர் இன்னும் காயாத கண்களுடன் சிறுமி சாந்தினி அவனைப் பார்த்து வரிசைப்பற்களைக் காட்டிச் சிரிக்கிறாள்.

அவள் பள்ளிக்கு நடக்கும் நாட்களில் அவளுடைய புத்தகங்களை அவன் சுமக்கிறான். சைக்கிளில் பின்னால் உட்கார வைத்துக் கடை வீதிகளுக்குக் கூட்டிப் போகிறான்.

அவள் தொழவேண்டிய நேரங்களில் அவளுக்காகப் பாய் விரித்துக் கொடுக்கிறான்.

அவளுடைய வாழ்வின் ஒவ்வொரு முக்கியமான கணங்களிலும் அவன் இருக்கிறான்.

அண்ணா... என் அருமை அண்ணா.

மேஜர் நாஸர் விமான நிலையத்திற்கு வந்திருக்கிறார். உறுதியான கையால் அவர்களைத் தட்டிக் கொடுக்கிறார்.

'அமெரிக்காவில் இரண்டு மாதம்தான். அப்புறம் நீங்கள் இந்தியாவிற்குப் போகிறீர்கள்... ஆல் தி பெஸ்ட்...''

அண்ணனின் காழ்ப்பு நிறைந்த கண்கள் அவருக்குச் சத்தியம் செய்வதைக் குழப்பத்தோடு கவனிக்கிறாள்.

'அங்கிள், அப்பா யார், அம்மா யார் என்று இன்று வரை நான் பார்த்ததில்லை. நீங்கள்தான் எனக்கு எல்லாம். உங்களை விட்டுப் போவது என்பதை என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை.'

'ரோ மத் மேரி ஜான்... அம்மா, அப்பாவையெல்லாம் விட உன்னை அன்பாக, கவனமாகப் பார்த்துக் கொள்ள ஓர் அண்ணன் இருக்கிறான் உனக்கு.'

எவ்வளவு சத்தியமான வார்த்தைகள்.

அம்மாவாய், அப்பாவாய், அண்ணனாய், அன்பான தோழனாய்...

''நம் அப்பாவை இத்தனை வருடங்கள் பத்திரமாகக் காப்பாற்றி வந்திருக்கும் இந்தியர்களுக்காக நான் இதைக் கூடச் செய்யா விட்டால் எப்படி சாந்தினி?'' சாந்தினியின் மனத்திரைக் காட்சிகளை அமீர் ஜவஹரின் குரல் கலைத்தது.

''நான் தனியாக இருக்க வேண்டுமே. எனக்குப் பயமாக இருக்கிறது அண்ணா.

''இல்லை சாந்தினி. தனியாக விட்டுப் போகவில்லை. கர்னலின் பொறுப்பில் விட்டுப் போகிறேன்.''

''ஒரே நாளில் நீ கர்னலின் அடிமையாக மாறிவிட்டாய் அண்ணா!''

அமீர் ஜவஹர் அவள் சொன்னதைக் கவனிக்காதவன் போல, அவளிடம் ஒரு காகிதத்தை நீட்டினான்.

''இந்த போன் நம்பர்களை வைத்துக் கொள் சாந்தினி. இது அச்சுதனின் அட்ரஸ். அவசரமென்றால் அவனைக் கூப்பிடு. நம்பர்களை நினைவில் வைத்துக் கொள். இந்தக் காகிதத்தை எரித்து விடு.''

''எனக்குப் பயமாக இருக்கிறது அண்ணா.''

இத்தனை நேரம் தொண்டையில்







— சீர்காழி வி. ரேவதி.

உருண்டு கொண்டிருந்த அழுகை, விமானப் புறப்பாடு போல திடீரென வெடித்தது. அமீர் ஜவஹரின் மார்பில் முகம் புதைய அவள் முதுகு குலுங்கியது. மெல்லிய பூவின் இதழை வருடுவது போல் அவள் தலையை வருடினான் அமீர் ஜவஹர்.

"பயப்படாதே சாந்தினி. உன்னை நல்லவர்களிடத்தில்தான் விட்டுப் போகிறேன்."

அமீர் ஜவஹர் அந்த ரகசியப் புத்தகத்தை எடுத்துக் கொண்டான்.

"சீக்கிரம் வந்து விடு அண்ணா."

காத்திருந்த டாக்ஸியில் ஏறினான்.

கடைசி மூச்சுவரை அந்தக் காட்சியை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியவள் போல, டாக்ஸி தெருமுனை திரும்பி மறையும் வரை இமைக்காத விழிகளால் பார்த்துக் கொண்டேயிருந்தாள் சாந்தினி.

**கா**ற்று இதமான குளிராக இருந்தது. ஜீப்பின் இருபுறமிருந்தும் சுதந்திரமாக நுழைந்து அவர்களுடைய கரும்பச்சை ராணுவ உடைகளைச் சிலுப்பிக் கொண்டிருந்தது.

ஸ்டியரிங்கைப் பிடித்திருந்த கேப்டன் மணிமாறன், இடது கையால் அருகில் அமர்ந்திருந்த அமீர் ஜவஹரின் தொடையில் கனமாகத் தட்டினான்.

"ஜாக்கிரதையாய் இரு அமீர். இப்போது எல்லைப் பகுதியில் மிகுந்த உஷாரோடு எல்லையோரக் காவல் படை கண்காணித்துக் கொண்டிருக்கிறது. கொஞ்சம் சந்தேகமாக இருந்தாலும் சுடச் சொல்லி உத்தரவு இருக்கிறது."

ஏற்ற இறக்கமாயிருந்த பூமியின் முரட்டு மண்ணை வாரியிறைத்துக் கொண்டு ஜீப் முன்னேறியது.

அமீர் ஜவஹர் காற்றினால் கண்ணோரம் துளித்த நீரைச் சுண்டினான். மணிமாறனைப் பார்த்தான்.

"இந்த டிரஸ் எனக்குப் பொருத்தமாக இருக்கிறதா?"

"இந்திய ராணுவ உடை உனக்கு மிகவும் அற்புதமாகப் பொருந்துகிறது அமீர்."

மணிமாறனின் குரலை ஏற்றத்தில் ஏறிய ஜீப்பின் இன்ஜின் சத்தம் சாப்பிட்டது. அதன் இடைவிடா ரீங்காரம் சுவர்க்கோழிகளைச் சவாலுக்கு அழைத்தது. பாறைகளில், மரங்களில், சின்னச் சின்னக் குன்றுகளில் மோதி எதிரொலித்தது.

வெட்டிப்போட்ட நகம் போல நிலா. நீல வானை நனைத்திருந்த மேகங்கள். முன் விளக்குகளை அணைத்ததும் பிராந்தியமே இருள் போர்வை போர்த்திக் கொண்டது. ஜீப் நின்றது.

"வா" என்றான் மணிமாறன். டார்ச்சை பூமியில் அடித்தபடி முன்னேறினான். இந்திய ராணுவ உடையில் இருந்த அமீர்



"இது உனக்கே நல்லா இருக்காப்பா? காசில்லாம சாப்பிட்டதுக்குத்தான் மாவாட்டினேன். சட்னியும் அரைச்சுக் கொடுக்கச் சொல்றியே, எதுக்கு?"

"எனக்கு டிப்ஸ் கொடுக்காததற்குத்தான்!"

— விருதை பக்தவத்சலம்.

ஜவஹர் இறங்கினான். மழை நீர் தேங்கியிருந்த இடங்களில் ராணுவப் படை போலக் கொசுக்கள். கனமான பூட்ஸ்களின் தினப்படி தண்டனையில் அமிழ்ந்து உலர்ந்து போயிருந்த புல்தரை. வளையிலிருந்து எட்டிப்பார்த்து, நடமாட்ட ஒலி கேட்டதும் ஒளிந்து கொள்ளும் எலிகள்.

மணிமாறன் டார்ச்சை அணைத்து விட்டான்.

நடந்தார்கள். கிட்டத்தட்ட ஒன்றரை ஃபர்லாங் நடந்ததும் மணிமாறன் நின்றான்.

"நீ போவதற்காக இந்தப் பாதையில் கண்ணி வெடிகளை எடுத்து விட்டேன். இந்திய எல்லை வரை நான் கேரண்ட்டி. பாகிஸ்தான் எல்லைக்குள் உன் அதிர்ஷ்டம். போய் வா."

கைகளைக் குலுக்கிக் கொண்டார்கள்.

அமீர் ஜவஹரின் இதயம் வேகமாகத் துடித்தது.

நடந்தான். ஒவ்வொரு அடியாக. ஒவ்வொரு அடியாக.

இந்திய ராணுவச் சீருடை அணிந்திருக்கும் தன்னை இந்திய வீரனாய் நினைத்து பாக் ராணுவத்தினர் சுட்டுவிடும் அபாயம் அவன் மூளையில் தகித்தது.

தோலுறையில் இருந்து துப்பாக்கியை எடுத்து, தழைத்துப் பிடித்தபடி அவன் பாகிஸ்தான் எல்லைக்குள் பிரவேசித்தான். அவன் காலை வைத்ததும் பூமியிலிருந்து நான்கு பேர் உற்பத்தியானார்கள்.

அவனுடைய மண்டையின் நான்கு புறமும் துப்பாக்கிகள் பதிந்தன.

பாகிஸ்தான் ராணுவத்தைச் சேர்ந்தவர்கள்.

(தொடரும்)

**பட்டுக்கோட்டை எம். எல். ஏ.:**

# "இதுவரை ஏதும் செய்யவில்லை!"

"**கா**லைல எழுந்தாத் தெருவில நடமாட முடியலீங்க..." என்றார் வேப்பங்குளம் ஊராட்சி மன்றத் தலைவர் ஆர். மோகன்தாஸ். காரணம் கேட்டோம்.

"எல்லாம் குடிதண்ணிப் பிரச்னைதாங்க. போர் போட்டு மோட்டார் வெச்சிருக்கோம். ஆனா, மோட்டார் சரியில்லை. அடிக்கடி ரிப்பேர். இதுவரைக்கும் பதினஞ்சாயிரம் வரைக்கும் ரிப்பேர் செலவே செஞ்சுட்டோம். ஆனாலும் சரியானபாடில்லை. அதனால, கரண்ட் செலவு ஆகிற அளவுக்குச் சரியாத் தண்ணியெடுக்கிறதில்லை. இந்த நெலைல நான் தெருப்பக்கம் போனா ஊர்ப் பெண்கள் கேள்வி மேல கேள்வியாக் கேட்கறாங்க... என்னால பதிலே சொல்ல முடியலை!"

"ஏன், மோட்டாரை மாத்திட்டாப் பிரச்னை சுலபமாத் தீர்ந்திடுமே!"

"சொல்றதுக்கு நல்லாத்தாங்க இருக்கு... முடியலையே! அஞ்சாயிரத்துக்கு மேல செலவு செய்யற அதிகாரம் எனக்கில்லை. யூனியன்ல பர்மிஷன் கொடுக்கணும். அவங்களைக் கேட்டா நிதி வசதியில்லைன்னு சொல்றாங்க. இருக்கிறது அஞ்சு ஹார்ஸ் பவர் மோட்டார்தான். புதுசா வாங்கினாவே பத்துப் பன்னிரண்டாயிரம் கூட ஆகாது. இதுவரைக்கும் ரிப்பேர் செலவே பதினஞ்சாயிரம் வரைக்கும் செஞ்சுருக்கமே... இதெல்லாம் வேஸ்ட்தானேன்னு சொன்னாலும் ஒத்துக்க மாட்டேங்கறாங்க. விஷயம் இதோட போச்சா... எங்க ஊரு ஏரியை ஜவஹர் வேலை வாய்ப்புத்திட்டத்துல தூர் எடுக்கப் பன்னிரண்டாயிரம் சாங்ஷன் பண்ணினாங்க. நாங்களும் அதை நம்பிச் செலவு பண்ணிட்டோம். இப்ப என்னடான்னா நாலாயிரம்தான் தருவோம். மிச்சத்தைத் தர மாட்டோம்னு சொல்றாங்க. பேருக்குத் தாங்க ஊராட்சித் தலைவர். ஜனங்களுக்கு ஒண்ணுமே செய்ய முடியலை. நெலமை இப்படியே போனா அடுத்த எலக்ஷன்ல எந்த மூஞ்சியை வெச்சுக்கிட்டுங்க ஓட்டுக் கேட்க முடியும்?" என்று ரொம்பவும் நொந்து போய்ச் சொன்னார் மோகன்தாஸ். இத்தனைக்கும் இவர் தி. மு. க. காரர்!

எம். எல். ஏ. அண்ணாத்துரையிடம், "உங்கள் கட்சிக்காரரே இப்படிச் சொல்கிறாரே..." என்று கேட்டோம்.

"அந்த மோட்டார் இனி உபயோகத்திற்கு லாயக்கற்றது என்று அவர் சர்டிபிகேட் வாங்கி முறையாகக் கொடுத்திருந்தால் நிச்சயம் புது மோட்டார் வாங்கியிருக்கலாம். அவர் அப்படிச் செய்தாரா என்பது தெரியவில்லை. ஏரி தூர் எடுத்த விஷயம் பற்றி எனக்கு முழுமையாகத் தெரியாததால் அது பற்றி நான் எதுவும் சொல்ல முடியாத



• சின்னப்பன்:
"திட்டங்கள் என்னவாயின?"



* பெண்கள் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்கிறார்கள்...

நிலையிலிருக்கிறேன். ஆனாலும் ஒரு விஷயம்... இப்போது பத்து ஏக்கர் பரப்பளவுக்கு மேலுள்ள ஏரிகளைத் தூர் எடுக்கும் பணிகள்தான் நடந்து கொண்டிருக்கின்றன. ஆலங்குளம் ஊராட்சி ஏரி எட்டு ஏக்கர் பரப்புள்ளதுதான் என்பதால் இனிமேல்தான் அதற்கான பணம் முழுமையாக ஒதுக்கப்படும்!'' என்றார் எம். எல். ஏ.

''எட்டாயிரத்துக்கும் மேல் ஜனத்தொகை. இருப்பது ஒரேயொரு குடிநீர்த் தொட்டி என்பதால் குடிநீர் போதவில்லை. இன்னொன்று கட்டுவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்களே தவிர கட்டியபாடில்லை. எங்கள் சுற்று வட்டாரத்திலுள்ள பதினெட்டுக் கிராமங்களுக்கும் பக்கத்திலிருக்கும் தாமரங்கோட்டையிலுள்ள ஆரம்ப சுகாதார நிலையம்தான். அதில் சித்த வைத்தியப் பிரிவுக்கு இன்னும் டாக்டரே நியமிக்கப்படவில்லை. இருப்பது இரண்டு டாக்டர்கள்தான். ஏழரை மணிக்கு டாக்டர்கள் வந்து நோயாளிகளைப் பார்க்க ஆரம்பிக்க வேண்டும். ஆனால் ஒரு நாளும் டாக்டர்கள் அப்படி வந்ததேயில்லை. தினமும் ஒன்பது மணிவாக்கில்தான் வருகிறார்கள். வேண்டுமானால் நீங்களே சென்று பாருங்கள்...'' என்றார் மேலக்கோட்டையைச் சேர்ந்த எஸ். ஆர். செல்வநாதன் என்ற இளைஞர்.

ஆரம்ப சுகாதார நிலையத்திற்குச் சென்றோம். அப்போது எட்டு மணி, ஐந்து நிமிடம். எல்லா அறைகளும் திறந்திருந்தனவே தவிர யாருமே இல்லை. ஆயாவைக் கூடத் தேடித்தான் கண்டுபிடித்தோம். பிறகு ஆயாவை அனுப்பிப் பக்கத்திலிருக்கும் நர்ஸ் குவார்ட்டர்ஸிலிருந்து கஷ்டப்பட்டு ஒரு நர்ஸை வரவழைத்துக் கேட்டோம். வழக்கமாக டாக்டர்கள் எட்டரை மணிக்கு மேல்தான் வருவார்கள் என்றார் அந்த



• கே. அண்ணாத்துரை எம். எல். ஏ.: ''இதுவரை ஏதும் செய்யவில்லை...''

நர்ஸம். நர்ஸ்கள் கூடவா அங்கே ஏழரைக்கு இருக்கக் கூடாது? இந்தக் கேள்விக்கு அவரிடம் பதிலில்லை.

வேறு வழியின்றித் தொகுதியின் மற்ற இடங்களுக்குச் சென்று விட்டு, நாம் பட்டுக்கோட்டையிலுள்ள லாட்ஜுக்குத் திரும்பிய போது, சம்பந்தப்பட்ட டாக்டர்களான எம். மீராஹுசைனும், பி. எஸ். கிரிதரும் நம்மைத் தேடி வந்தார்கள்.

''வழக்கமாகக் கிராமங்களில் ஒன்பது மணிக்கு மேல்தான் நோயாளிகள் வருவார்கள். ஏழரைக்கு யாரும் வருவதில்லை. அதனால்தான் நாங்கள் சிறிது தாமதமாக வருகிறோம். அப்படித் தாமதமாக வந்தாலும் எந்த நோயாளியையும் நாங்கள் நேரமாகி விட்டதென்று திருப்பியனுப்புவதேயில்லை. எத்தனை நேரமானாலும் கடைசி நோயாளியையும் பார்த்து விட்டுத்தான் செல்வோம். வழக்கமாக எட்டு மணிக்



• ராஜகோபாலன்



• இன்னொரு விராணம்!



• எஸ். ஆர். செல்வநாதன்

கெல்லாம் வந்து விடுகிற நாங்கள். நீங்கள் வந்த போது (8.8.90) மட்டும் எங்கள் துரதிருஷ்டத்தின் காரணமாக லேட்டாக வந்து விட்டோம்...'' என்றார்கள்.

''சரி, நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள். அதையே, நீங்கள் லேட்டாக வருவதால் தான் நோயாளிகளும் வேறு வழியின்றி லேட்டாக வருகிறார்கள் என்றும் சொல்ல லாமல்லவா?'' என்று கேட்ட போது, அவர்களால் சரியான பதில் சொல்ல இயல வில்லை!

இது பற்றி எம்.எல்.ஏ. விடம் சொன்ன போது, ''நானும் அவர்களிடம் சொல்லிப் பார்த்து விட்டேன். ஆனாலும் கேட்ப தில்லை. மேலும் மேலும் நான் போய்ச் சொன்னால், அரசு நிர்வாகத்தில் கட்சிக் காரன் வந்து தலையிடுகிறான் என்பார்கள். என்ன சார் செய்ய முடியும்? நீங்கள் எழுது வதைப் பார்த்து விட்டு மேலதிகாரிகள் தான் நடவடிக்கை எடுக்க வேண்டும். என்னால் செய்யக் கூடியது ஒன்றுமேயில்லை!'' என்றார்.

''மழைக் காலத்தில் இந்த நல்லுண்ணி ஆற்றில் ஓடும் நீர் வீணாகத்தான் போகிறது. இதில் சின்னதாக ஒரு செக்டேம் கட்டினால் கூடச் சுமார் முந்நூறு ஏக்கர் நிலம் பாசனம் பெறும் வாய்ப்புள்ளது. முன்பு அப்படி யொரு திட்டம் கூடப் போட்டார்கள். ஆனால் அது என்னவாயிற்றென்றே தெரிய வில்லை...'' என்றார் கீழக்கரம்பயத்தின் முன்னாள் பஞ்சாயத்துத் தலைவரும் மார்க் ஸிஸ்ட் கட்சிப் பிரமுகருமான சின்னப்பன். கூடவே, ''நம்பிவயல் என்ற கிராமத்தில் சேஷசாயி பேப்பர் மில்காரர்கள் ஏதோ தொழில் துவங்குவதாகவும் முன்பு பேசப் பட்டது. இப்போது என்னவாயிற்று என்றும் தெரியவில்லை. எம். எல். ஏ. விடம் கேட் டுப் பாருங்கள்!'' என்றும் அவர் சொன் னார். நாமும் அவர் சொன்னபடியே சிரத் தையோடு எம். எல். ஏ. விடம் சொன்ன போது, தமக்கும் அது பற்றி ஒன்றும் தெரிய வில்லை என்றும் விசாரித்துப் பார்ப்பதாக வும் சொன்னார்!

''எங்களூர் மயானத்தை வந்து பாருங் கள்...'' என்று நம்மை அழைத்துச் சென்றார் பட்டுக்கோட்டை — நாடிமுத்து நகரைச் சேர்ந்த கே. ராஜகோபாலன். போனோம்.

''பார்த்தீர்களா... தண்டவாளத்தைத் தாண்டித்தான் பிணங்களைக் கொண்டு செல்ல வேண்டும். தண்டவாளமாவது கண்ணுக்குத் தெரிகிறது. ஆனால், தண்ட வாளத்தை ஒட்டிச் செல்லும் கை காட்டி மரக் கம்பிகளைப் பாருங்கள்... கண்ணுக் குச் சட்டென்று தெரியாது. இதில் தடுக்கி விழுந்தவர்கள் ஏராளம். இது ஒருபுறம். மறுபுறம் பாருங்கள்... பிணங்களை எரிக் கும் மயான ஷெட்களில் பாதிக் கூரை கிடை யாது. மழைக் காலத்தில் பெரும்பாடு. இது பற்றி நகராட்சியிடம் மட்டுமல்ல; குடியரசுத் தலைவர் ஆர். வி.யிடம் கூடச் சொல்லி விட்டேன். இது அவருடைய ஊராயிற்றே! நான் அவரிடம் தமாஷாக, 'பட்டுக்கோட் டையிலிருக்கும் உங்கள் குடும்பத்தைச் சேர்ந்த முதியவர்கள் இறந்தால் கூட இந்தக் கதிதான்' என்று கூடச் சொன்னேன்! அவரே சிரித்து விட்டார்!'' என்றார் ராஜ கோபாலன்.

இது பற்றி எம். எல். ஏ. விடம் சொன்ன போது, ''ஷெட்களின் கூரைகளை நகராட்சி யில் விரைவில் போட இருக்கிறார்கள். அந்தப் பாதை ரயில்வே சம்பந்தப்பட்டது. அவர்களிடம் சொன்னால் ஏராளமாகப் பணம் கேட்கிறார்கள். அதோடு ஆண்டு தோறும் பராமரிப்புச் செலவாகவும் நிறை யக் கேட்கிறார்கள். அதுதான் பிரச்னை. இருப்பினும் நகராட்சியும் ரயில்வே நிர்வாக மும் சேர்ந்து விரைவில் ஒரு நல்ல முடிவுக்கு வருவார்கள் என்று நம்புகிறேன்'' என்றார்.

நாம் மயானத்தைப் பார்வையிடச் சென்ற போது, அங்கே வரிசையாக மூன்று கள்ளச் சாராயக் கடைகளில் ஜரூராக வியாபாரம் நடந்து கொண்டிருந்தது. அதில் ஒரு கடைக்காரரிடம் அவர் பெயரையும் போட்டோவையும் பிரசுரிக்க மாட்டோம்

என்கிற உறுதிமொழியோடு ஒரு மினி பேட்டி எடுத்தோம்!

''இந்தக் கள்ளச் சாராயக் கடை உங்களுடையது தானா?''

''இல்லை. முதலாளி வேறு ஒருவர். அவர் பெயர்....''

''அவர் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்?''

''எல்லாக் கட்சிக்காரர்களும் அவருக்கு வேண்டியவர்கள்தான்.''

''நீங்கள் எங்கிருந்து சாராயம் வாங்கி வருகிறீர்கள்?''

''உங்களுக்குத் தெரியாதா? பக்கத்திலிருக்கும் மதுச்சேரி, அணைக்காடு கிராமங்களிலிருந்துதான். அங்கிருந்துதான் இந்தச் சுற்று வட்டாரத்திற்கே சப்ளையாகிறது!''

''என்ன விலைக்கு வாங்கி வருகிறீர்கள்? என்ன விலைக்கு விற்கிறீர்கள்?''

''பத்து லிட்டர் 120 ரூபாய் என்று வாங்கி வந்து நூறு மில்லி இரண்டு ரூபாய் என்று விற்கிறோம்.''

''ஒரு நாளைக்கு எவ்வளவு விற்பீர்கள்?''

''பத்து லிட்டர் அளவுக்குத்தான் விற்கும்!''

''அவ்வளவுதானா?''

''ஆமாம். கடைகள் அதிகமாகி விட்டதால், போட்டியும் அதிகமாகி விட்டது.''

''இதெல்லாம் போலீஸுக்குத் தெரியாதா?''

''ஏன் தெரியாது? வாரத்திற்கு 240 ரூபாய் மாமூல் தருகிறோம். அதோடு, மாதத்திற்கு ஒருமுறை எங்களைக் கள்ளச் சாராயம் விற்றதாகக் கேஸும் புக் செய்வார்கள். அபராதம் கட்டி விட்டு வெளியே வர வேண்டும். போலீஸுக்கும் எங்களுக்கும் இடையிலான உடன்பாட்டில் இதுவும் ஒன்று.''

''அரசாங்கமே மலிவு விலையில் சாராயம் விற்கப் போகிறதே. அதனால் உங்கள் வியாபாரம் பாதிக்காதா?''

''வாய்ப்பில்லை. காரணம், எங்கள் சாராயம் குடித்தவுடனேயே சுறுசுறுவென்று இருக்கும். அரசு சாராயம் அப்படி இருக்காது. மந்தமாகத்தான் இருக்கும். அதோடு அதன் விலையும் அதிகம். அதனால், எப்போதுமே எங்கள் சாராயத்தைத்தான் கஸ்டமர்கள் தேடி வருவார்கள்.''

''அரசு சாராயக் கடைகளை ஏலம் எடுத்தவர்கள் தங்கள் வியாபாரம் பாதிக்குமென்று உங்களையெல்லாம் விற்கக் கூடாது என்பார்களே?''

''அதெல்லாம் ஒரு அட்ஜஸ்ட்மெண்டில் சரியாகி விடும்!''

இது பற்றி எம். எல். ஏ. விடம் சொன்ன போது, ''ஸாரி சார். இந்த விஷயத்தில் என் பதில் நோ கமெண்ட்ஸ்!'' என்று சொல்லி விட்டார்! மற்ற கேள்விகளுக்குப் போனோம்.

''பட்டுக்கோட்டையில் குடிநீர்ப் பிரச்னை உள்ளதே?''

''உண்மைதான். அதற்காகத்தான் 1.95 கோடி செலவில் ஒரு திட்டம் தீட்டப்பட்டு அரசிடம் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.''

''பட்டுக்கோட்டையில் ஒரு கல்லூரி கூட இல்லை என்பது எல்லோருடைய வருத்தமாகவும் இருக்கிறது.''

''ஆமாம். கலைக் கல்லூரி அமைப்பதற்கான சாத்தியக் கூறுகள் இல்லை. அரசின் கொள்கை அப்படியிருக்கிறது. ஆனால், பொறியியற் கல்லூரி ஆரம்பிக்க வாய்ப்புள்ளது. தனியார் பொறியியற் கல்லூரிகளில் ஏராளமாக டொனேஷன் கேட்பதால், அதைத் தடுக்க அரசே ஆரம்பிக்கும் திட்டம் உள்ளது. அத்திட்டத்தில் பட்டுக்கோட்டையில் ஒரு கல்லூரி வர வாய்ப்புகள் அதிகம். எப்படியாவது ஒரு பொறியியற் கல்லூரி வந்தாக வேண்டும் என்பதில் நாங்களும் ஆர்வமாக இருக்கிறோம். அவசியம் அமையுங்கள் என்று முதல்வர் கலைஞர் அவர்களை உங்கள் மூலமாகவும் கேட்டுக் கொள்கிறேன்.''

''பட்டுக்கோட்டையிலுள்ள நாடியம்மன் கோயில் ஏரி ஏராளமான ஆக்ரமிப்புகளுக்கு உள்ளாகியிருக்கிறது.''

''உண்மைதான். அதைப் பொதுப் பணித்துறையினர்தான் அகற்ற வேண்டும். ஏனோ செய்யவில்லை. நானும் அவர்களிடம் கேட்டுக் கொள்கிறேன்.''

''பட்டுக்கோட்டையிலுள்ள சினிமாத் தியேட்டர்களில் வெறுமனே காசை மட்டும் வாங்கிக் கொண்டு, டிக்கெட் கொடுக்காமலேயே அனுமதிக்கிறார்களாம். பலரும் எங்களிடம் சொன்னார்கள். இது அரசை ஏமாற்றுகிற விஷயமல்லவா?''

''நான் சினிமாவுக்கே செல்வதில்லை; அதனால் எனக்கு அது பற்றி ஒன்றும் தெரியாது. அதிகாரிகளிடம் பேசுகிறேன்.''

''உங்கள் பட்டுக்கோட்டைத் தொகுதியில் தென்னை மரங்கள் அதிகம். அதனால் தென்னை தொடர்பான ஏதாவதொரு தொழிற்சாலை அமைக்க நீங்கள் அரசை வற்புறுத்தலாமல்லவா?''

''கேட்டிருக்கிறேன். நீங்கள் சொல்வது

● 'இதென்ன, இந்த நிகழ்ச்சி படு போரடிக்கிறதே... டி. வி. யைப் போட்டு உடைத்து விடலாமா?' என்ற கோப உணர்ச்சி பொங்கி எழுகிறதா? இதைத் தணிக்க ஓர் எலக்ட்ரானிக் கருவியை ஜப்பானில் கண்டுபிடித்திருக்கிறார்கள். டி. வி. யின் மீது கோபம் வரும் பொழுது, இக்கருவியைக் கல் மாதிரி விட்டெறிந்தால் டி. வி. யை ஆஃப் செய்து நம் கோபத்தைத் தணிக்கிறது. டி. வி. செட்டுக்கு எந்தவிதப் பாதகமும் ஏற்படுவதில்லை.

— எஸ். ராமன்.





அருள்வாக்கு

சுயநலம் கூடாதுதான்; பிறருக்கு உதவ வேண்டியதுதான். ஆனால் 'உபகாரம்' என்றால் பிறத்தியாருக்குச் செய்தால் மட்டும் போதுமா? இதோ நமக்கென்று ஈச்வரன் ஓர் உயிரைக் கொடுத்த மாதிரி கொஞ்சம் வெளியே அவிழ்த்து விட்டிருக்கிறானே, மனஸ் என்ற ஒன்றைக் கொடுத்து அதை நல்லது கெட்டது இரண்டிலும் ஆடுகிற மாதிரி விட்டிருக்கிறானே! இந்த நம் உயிருக்கு, ஜீவாத்மா என்கிறார்களே, அதற்கு மட்டும் நாம் உபகாரம் பண்ணாமல் இருக்கலாமா? மனஸை நல்லதிலேயே செலுத்தி, பகவான் தந்திருக்கிற வாக்கு, சரீரம் எல்லாவற்றையும் நல்ல பேச்சு, நல்ல காரியங்கள் இவற்றிலேயே பிரயோஜனப்படுத்தி இந்த உயிரைப் பேரின்ப நெறியில் சேர்க்க நாம் கடமைப் பட்டிருக்கவில்லையா? சின்னதான ஸ்வயநலத்தை விட்டு, இந்தப் பெரிய 'ஸ்வயநல'த்துக்கு எல்லோரும் பாடு படத்தான் வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

போன்றதொரு தொழிற்சாலையும், ஒரு பொறியியற் கல்லூரியும் பட்டுக்கோட்டையில் அமையப் பாடுபடுவதுதான் எனது லட்சியமாகக் கொண்டிருக்கிறேன். இது வரை தொகுதிக்கு எதையும் செய்யவில்லை என்பதால் இவற்றை எப்படியும் வாங்கி விடுவேன்.''

''நீங்களும் நகராட்சித் தலைவர் விஸ்வநாதனும் தி. மு. க. வைச் சேர்ந்தவர்கள் என்றாலும் கூட உங்களிடையே கோஷ்டி மனப்பான்மை இருப்பதால்தான் பல திட்டங்களைப் பட்டுக்கோட்டையில் அமல் படுத்த முடியவில்லை என்கிறார்களே?''

''அதெல்லாம் வெறும் கட்டுக் கதை. எங்களிடையே எந்தவிதமான கோஷ்டி மனப்பான்மையும் இடையவே கிடையாது.''

''இல்லை. நகராட்சித் தலைவர் முதல்வரை அழைத்துத் தமது சினிமாத் தியேட்டரைத் திறக்கச் செய்த நிகழ்ச்சியில் உங்களை மைக்கில் அறிவித்துத் தேட வேண்டியதாயிற்று. கோஷ்டிப் பூசல் காரணமாகத்தான் அந்த நிலை உருவானது என்கிறார்களே?''

''அந்த விழாவுக்குச் சிறிது தாமதமாகச் சென்றேன். அதனால் கட்டி விடப்பட்ட கட்டுக் கதைதான் இது. எங்களிடையே எந்த வேற்றுமையும் இல்லை.''

''பட்டுக்கோட்டையிலிருந்து வேதாரண்யத்திற்குக் குடிநீர் கொண்டு செல்லும் திட்டம் எம். ஜி. ஆர். காலத்தில் போடப் பட்டது. அதற்காக லட்சக்கணக்கில் செலவு செய்து, தயாரிக்கப்பட்ட குழாய்களெல்லாம் வீராணம் குழாய்களைப் போல் வெறுமனே கிடக்கின்றன. என்ன காரணம்?''

''பட்டுக்கோட்டைப் பகுதியிலுள்ள நிலத்தடி நீரை எடுத்து வேதாரண்யத்துக்குக் கொண்டு செல்லும் போது, இங்கே நிலத்தடி நீர் வற்றிவிடுமென்று மக்கள் அஞ்சுகிறார்கள். அப்படி எடுக்கக் கூடாதென்று மற்ற அரசியல் கட்சிகளும் போராட்டம் நடத்தின. பட்டுக்கோட்டை மக்கள் வேதாரண்ய மக்களுக்குக் குடிநீர் தர மறுத்தால், கர்நாடக மக்கள் எப்படி தமிழகத்துக்குக் காவிரி நீர் தருவார்கள் என்று அமைச்சரே மக்களைப் பார்த்துக் கேட்டார். ஆயினும் மக்கள் சம்மதிக்க மறுக்கிறார்கள். என்ன செய்ய முடியும்? நாங்கள் ஆளும் கட்சியாக இருப்பதால் இந்த விஷயத்தில் வெளிப்படையாகவும் கருத்துக் கூற முடியாத நிலையில் இருக்கிறோம்!'' என்றார் எம். எல். ஏ. கே. அண்ணாத் துரை.

கடைசியாக ஒன்று. நாம் பட்டுக்கோட்டைத் தொகுதியைச் சுற்றிப் பார்ப்பதற்காக டூரிஸ்ட் கார் ஏற்பாடு செய்யச் சென்ற போது, அதிர்ச்சியாக இருந்தது. காரணம், மற்ற ஊர்களில் நாம் வழக்கமாகக் கொடுக்கும் கட்டணத்தைப் போல் இரண்டு மூன்று மடங்கு அதிகம் கேட்டதுதான்! விசாரித்த போது, ''காலை ஏழு மணியிலிருந்து மாலை ஏழு மணி வரைதான் பெட்ரோல் பங்குகள் திறந்திருக்கும்; ஞாயிற்றுக் கிழமைகளில் அரைநாள்தான் திறந்திருக்கும் என்பதால் பங்க்காரர்கள் ரேஷனில்தான் டீசலும் பெட்ரோலும் தருகிறார்கள். அதனால்தான் இப்படி!'' என்றார்கள் டாக்ஸிகாரர்கள்! நாம் ஏற்பாடு செய்த டாக்ஸி டிரைவர் கூட எம். எல். ஏ. அண்ணாத் துரையின் சிபாரிசின் பேரில்தான் பெட்ரோல் பிடித்துக் கொண்டு வந்தார் என்றால் நிலைமையின் அவலத்தை மேலும் விவரிப்பானேன்?

— இளங்கோவன்

வண்ணப்படங்களும் படங்களும்: சுபா

லைம்

# ஸின்த்தால்






அனைத்திலும் புத்துணர்ச்சிமிக்க லைம் சோப்

அனைத்திலும் உன்னதமான லைம் சோப்

துர்நாற்றம் அகற்றும் ஒரே லைம் சோப்

# விளிம்பில் சந்தித்தவர்கள்

இரயில் தடங்கலாய் நின்று கொண்டிருந்தது. அரை மணி நேரமாயிற்று. இன்னும் கிளம்பக் காணோம். இருட்டு மெல்லக் கவிழ்ந்து கொண்டிருந்தது. இன்னும்கொஞ்ச நேரத்தில் ரயில் கறுப்பு பூதமாகி விடும்என நினைத்தான் சிவராமன். எதிரிலிருந்த சங்கரியின் கழுத்தில் புதுத்தாலி மின்னிக் கொண்டிருந்தது.

''கேலா... கேலா'' என்றொருவன் சப்தமிட்டுப் போனான். சங்கரி எட்டிப் பார்த்தாள். அவனுருவம் தென்படவில்லை. கம்பார்ட்மெண்ட்டில் பெரும்பாலோர் கீழிறங்கி ரயிலின் தடங்கலைப் பற்றி அலசிக் கொண்டிருந்தனர்.

''கேலான்னா...''

''வாழைப்பழம்.''

''என்ன பாஷை?''

''இந்தி...''

சிவராமன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். புது சந்தோஷம், முகத்திலும், உடம்பிலும் தெரிந்தது.

''அப்போ ஒருத்தன் 'பல்லி பல்லி'ன்னு வித்துட்டுப் போனான். அய்யோ பல்லியெல்லாம் விக்கறாங்களா. கனவான்னு சந்தேகம். பார்த்தா அவன் வேர்க்கடலையைத் தான் வித்துட்டுப் போயிட்டிருந்தான்!'' சிரித்தாள். நாணமும், சிரிப்புமாய் அவள் முகம் புதுசாய் இருந்தது.

''பல்லீன்னா தெலுங்குலே வேர்க்கடலை...''

''உங்களுக்கு இந்தி; தெலுங்கெல்லாம் தெரியுமா?''

''இன்னும் ரெண்டு பாஷை தெரியும்...''

''எனக்குத் தமிழ் தவிர வேறெதுவும் தெரியாது..''

''எல்லாமே கட்டாயத்துலே கத்துக்கிட்டது!''

சிவராமனுக்கு முகம் கறுக்கத் தொடங்கியது. அவள் எதைஎதையோ நினைத்து முகத்தில் அதைப் பிரதிபலித்துக் கொண்டிருப்பதாய்க் கலவரத்துடன் எண்ணி, அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். கம்பார்ட்மெண்ட் பிரயாணிகள் இருவர் மீண்டும் வந்து உட்கார்ந்து கொண்டனர். ரயில் தடங்கலுக்குக் காரணம் தற்கொலை என்றார்கள். முன் சென்ற ரயில் தடம் புரண்டது என்றார்கள். ரயில் பாதையில் வெடிகுண்டு இருக்கலாம் என்றார்கள்.

ரயில் பாதையின் இருபுறங்களிலும் அடர்ந்த காடுகள் தென்பட்டன. எல்லாம் இருட்டாகத் தெரிந்தது. துர்கதியாய் யாரோ சபித்து விட்ட இடம் மாதிரி எல்லோரும் பயந்து நகர்ந்து கொண்டிருந்தார்கள். ஒரு சின்ன ரயில்வே ஸ்டேஷன் அவ்விடம். சிவராமன் கொஞ்ச நேரம் வெளியே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் சட்டென அவள் கேள்வியிலிருந்து பேச ஆரம்பித்ததும் முன்பிருந்த சூழல் சட்டெனக் கலவரப்பட்டு விட்டது போலிருந்தது சங்கரிக்கு.

''ஏதாச்சும் ரயிலேறிக் கண்காணாத இடத்துக்குப் போயிடணும்ன்னு நான் நெனச்சிருக்கேன்.''

சங்கரிக்கு மெல்ல பயம் உணர்ந்தது. கவனித்தான் சிவராமன்.

''இப்போ இல்லே. வேலையில்லாமே திரிஞ்சப்போ, மத்தவங்க முன்னாலே சோத்துக்கு அவமானப்பட்டப்போ.. சோத்துக்காச்சும் ஆகட்டும்னு சாதாரண வேலைக்குப் போனப்போ, படிப்பு காட்டிக் குடுத்துச்சு... பனியன் கம்பெனியிலே கணக்



சுப்ரபாரதிமணியன்

குப் பிள்ளைன்னு உத்யோகப் பேர். படிக்காத முதலாளி கொடுக்கற முந்நூறு ரூபாய்க்கு அவங்க வீட்டு அந்தரங்க வேலையெல்லாம் செய்ய வேண்டியிருந்துச்சு. வெறுத்துச்சு.. சொந்த ஊர், சொந்த பாஷையைக் கட்டிக்கிட்டு எதுக்கு வெறுமனே அலையணும்ன்னு ஓடினேன். ஒரு வடக்கத்திக்காரன்... அங்க பன்னிரண்டு மணி நேரம் என்னை உறிஞ்சிட்டாலும் ஆயிரம் ரூபாய் குடுத்தான். பெத்தவங்களுக்கு நானூறு ரூபா அனுப்ப முடிஞ்சது. அவமானங்களையெல்லாம் சுலபமா ஜீரணிக்கக் கத்துக்கிட்டேன். வருஷம் அம்பது அம்பதாக் கூட்டிச் சம்பளம் வந்துது. இந்தச் சமயத்திலே கல்யாணம்கறது பயப்பட்ற விஷயமாச்சு. பெத்தவங்க கண்ணீரும், அவஸ்தையும் கல்யாணம் பண்ணச் சொல்லுச்சு. இப்போ என்னோட பயத்தோட நீயும்...''

பெரிய பிரசங்கமொன்றை முடித்தவன் போல் சொல்லி விட்டு நிமிர்ந்து பார்த்தான். சங்கரி அவனையே பார்த்தாள். அவனின் பாரம் இறங்கி விட்டது என்று பட்டது.

''காத்து மாதிரி சுலபமாயிட்டீங்கன்னு நினைக்கிறேன்.''

மெல்லச் சிரித்துக் கொண்டே சொன்னாள். அந்தச் சிரிப்பு, கறுத்துப் போன முகத்திலிருந்து கைப்பாய் வெளி வந்தது.

''நானும் காத்து மாதிரி ஆக பாரத்தை எறக்கிடட்டுமா...''



இதை எதிர்கொள்ளாதவன் போல் சிவராமன் பார்த்தான். கல்யாணமாகி எட்டு நாட்கள்தான் கடந்திருந்தன. தன் கடந்த காலத்தை எப்போதாவது தூக்கிப் போட்டுச் சங்கரியிடம் வெளிக்காட்டி ஒய்ந்து போகலாம் என நினைத்திருந்தான். ஆனால் சட்டென ரயில் பயணத் தடங்கல் அதற்கு வழி கொடுத்து விட்டது என்றிருந்தது.

எட்டு நாட்களில் இன்னும் ஸ்பரிசம் கூட முழுமையானதாக இருக்கவில்லை. ஸ்பரிசம், வெட்கமும், பரபரப்புமாய் இருந்து விட்டது. முழு ஸ்பரிசத்திற்கு முன் அவனின் பிரச்னைகளும், அனுபவங்களுமாய் அவள் முன் நிற்பது சந்தோஷமாகவே இருந்தது.

''நானும் உங்கள மாதிரியே எங்காச்சும் ஓடிப் போகணும்ன்னு இருந்திருக்கேன். ஆதிவாசிகள் மாதிரி திரியணும். கல்யாணமோ, குடும்ப பந்தமோ வேண்டாமுன்னு கூட நெனப்பு வந்திருக்கு. உடனே அது விரக்தியாலே வர்ற வார்த்தைகள்ன்னும் தெரிஞ்சிருக்கு.''

சிவராமன் அவன்முன் பெரிய படுதா தொங்குவதாய் உணர்ந்தான். பரபரவென்று அந்தப் படுதாவைக் கிழித்தெறிந்து விட்டு என்ன என்னவென்று ஆவலுடன் கேட்க வேண்டும் போலிருந்தது. சாந்தப்படுத்திக் கொண்டான். நிதானமாய் மூச்சை உள்ளிழுத்துக் கொண்டான்.

''வரன்னு வர்றவங்க போறவங்க முன்னாலே உக்காந்து சலிச்சேன். யார் யாரோ கால்லே விழுந்து அழுத்துப் போச்சு. கனவுகள் சர்வசாதாரணமாச்சு. அப்புறம் கனவுகளைக் கூட வெறுத்தேன். அது விஷமாத்தான் தோணுச்சு. வயசும் ஏறிட்டே போச்சு. நான் படிச்ச படிப்பு, நான் சுதந்திரமா இருக்கலாமுன்னு சொன்னாலும் எங்க கிராமச் சூழ்நிலையிலே அதெல்லாம் முடியல்லே. எனக்காக யாராச்சும் வருவாங்கன்னு காத்திட்டிருந்தேன். பவுனும், பணமுமா எல்லாரும் பாரங்களைச் சுமத்துனாங்க. சுமக்க முடியலே... உதறி உதறி, வயசு ஏற ஏற மூச்சுத் திணறிச்சு. அப்புறம் கடைசியில நீங்கதான்...''

சிவராமன் ஊர் வரும்போதெல்லாம் அவனின் அம்மாவும், அப்பாவும் கல்யாணப் பேச்செடுத்தார்கள். இரண்டு வருடங்கள், சம்பளத்தைக் கணக்கிட்டு வேண்டாம் என்று மறுத்தான். ஓட்டலும், அவஸ்தைகளும் அவனை நிர்மூலமாக்கும் என்று உணர்ந்தபின் சரியென்றான்.



"நம்ம படத்தைப் பற்றிப் பத்திரிகையிலே என்ன விமர்சனம் எழுதி இருக்காங்க?"

"வீணா தியேட்டர்ல போய்ப் படம் பார்க்க வேணாம்; கூடிய சீக்கிரம் டி. வி. யில போடுவாங்கன்னுதான்!"

— எஸ். முகம்மது ஆகப்.

பெண் தேடும் படலம் அவனைக் கேவலப்படுத்தியது. வேலையற்று சாதாரண உத்யோகத்திற்காய் ஆயிரத்து ஐந்நூறு மைல் தள்ளி ஓடினவன் என்றார்கள். 'ரெண்டு ராத்திரி ரெண்டு பகலுமா, ரயில்லே அங்க போறதுக்கு?' என்று கேட்டார்கள். இரண்டு ரயில்கள் பிடித்துப் போகும் ஊரை ஏழு கடல் தாண்டின தேசம் என்று கற்பனை செய்து சொன்னார்கள். 'வேற ஜாதிக்காரங்க அங்கெல்லாம் சம்பந்தம் குடுக்கலாம். ஆனா நம்ம ஜாதி இந்த ஆத்துக் கரையைத் தாண்டி எப்போ போச்சு?' என்றார்கள். 'தூரம் இருக்கறவன் — அங்கே என்ன வேலை பாக்குறானோ என்னவோ... அவன் சொல்றதைத்தானே நம்பணும்'' என்றார்கள். சிவராமன் அவன் ஜாதியைச் சபித்தான். 'ஜாதி வாழ விடாது போலிருக்கிறது. அது வம்சமற்றுப் போகாதா' என்றிருந்தது.

பெற்றோரின் கைகள் ஜாதிய எல்லைகளைத் தாண்டி எங்கும் நீளவில்லை. முடங்கித் துழாவின. 'வரதட்சணையும், பவுனும் இல்லாட்டிக் கூடப் பரவாயில்லே; குடும்பத்துக்கு ஏத்தா இருந்தாப் போதும்' என்று சிவராமனுடைய அப்பாவின் வாய் வார்த்தைகள் விரக்தியில் நழுவின போது, உறவுகள் சிரித்தன. 'இவ்வளவு தாழ்ந்து போகணுமா?' என்றார்கள்.

ஒவ்வொரு முறை ஊர் வரும் போதும் தலைகுனிந்தே சிவராமன் பெண் பார்க்கப் போனான். 'மூணு பவுன்தான் போட முடியும். அப்புறம் தாலிக் கயிறுதான். ஆனா ஹைஸ்கூல் படிச்சிருக்கு...' என்று சங்கரியின் வரன் வந்தது. ஜாதியில் பெண் கிடைத்ததைச் சிவராமனின் பெற்றோர் பாக்கியமாகக் கொண்டார்கள். சங்கரி சற்று வயதான முதிர்கன்னி என்றார்கள் அவனின் உறவுகள். 'எனக்கு மட்டும் வயசாகலியா?' என்று திருப்பிக் கேட்டான் சிவராமன்.

கறுப்புப் போர்வையால் மூடப்பட்டது போன்ற இருள். சிவராமன் வெளிப்புறத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். எல்லாம் பேசி முடிந்தாயிற்று. எல்லா பாரங்களையும் இறக்கியாயிற்று. இனி எதுவுமில்லை என்பது போல் இருவரும் இருந்தனர். சிவராமன் சங்கரியைப் பார்த்தான். ஏதாவது பேச வேண்டும் போலிருந்தது.

"உன் மொகத்திலே நிறையப் பருக்கள். அது தனியா அழகா இருக்கு. 'மரங்களுக்கோர் தனியழகு, இரவில் பெண்களைப் போல'ன்னு ஒரு கவிஞன் சொன்ன மாதிரி. இந்தப் பருக்களுக்கும் சொல்லணும் போல இருக்கு..."

"உம்..."

"கல்யாணக் களை மாதிரி கல்யாணப் பருவுன்னு இருக்கோ என்னமோ?"

"கல்யாணப் பருவில்லே; வயசுக்கு மீறின பரு. முதிர்ச்சியினாலே வர்ற பரு..."

சட்டெனத் திடுக்கிட்டான் சிவராமன். சங்கடமாயிருந்தது அவனுக்கு.

"என்ன... என்னாச்சு?"

"ஒண்ணுமில்லே. முதிர்ன்னு எனக்கே பட்டுது. சொன்னேன்..."

"நான் மட்டும் முதிர் இல்லியா?"

"ஆணுக்கு வயசாகலாம். முதிரா இருக்கலாம். ஆனா பெண்..."

"இந்த பிம்பம் இனிமேலாச்சும் உனக்குள்ள இருக்கக் கூடாது. உடையணும்."

"நீங்க என்ன சொன்னாலும் என்னோட முதிர் வயசுதான் உங்களை என்னோட சேர்த்திருக்குன்னு நெனைக்கறேன். நான் இளமையா இருந்திருந்து, எங்க குடும்பம் கொஞ்சம் வசதியா இருந்தா எங்க வீட்லே இவ்வளவு தூரமுன்னு வேண்டாமுன்னு தான் சொல்லியிருப்பாங்க."

"அப்படின்னா நான் இவ்வளவு தூரம் வேலை கெடைக்காமே வந்து உத்யோகம் பாக்கறதும், என்னோட கொறச்சலான சம்பளமும்தான் உன்னை என்னோட சேர்த்திருக்குன்னு சொல்றது ஒண்ணும் பொய்யில்லைன்னு படுது. அது உண்மைதானே?"

அவள் முகத்தைத் திருப்பி எங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள்.

"அடுத்த அடி சறுக்கல்னு தெரிஞ்சுக்கிட்டுக் கடைசி அடிக்கு முன்னாலே வெவ்வேறு பக்கங்களிலிருந்து மலை விளிம்புக்கு வந்து கையைப் புடிச்சிருக்கோம், நாம ரெண்டு பேரும்!"

"ஆமாம்" என்ற சங்கரியின் கண்களில் நீர் துளிர்த்தது.

ரயிலின் ஊதல் சப்தம் கேட்டுக் கீழே நின்றிருந்தவர்கள் திமுதிமுவென ஏற ஆரம்பித்தனர். ரயிலின் ஊதல் நீண்டது. சிவராமன் பக்கம் நகர்ந்து உட்கார்ந்தவள் அவன் கைகளைத் தொட, அவனும் பிடித்து இறுக்கிக் கொண்டான். அந்தத் தொடுகை உன்னதமானதாகவும், ஒருவருக்கொருவர் ஆறுதல் சொன்னபடியான புதுப் பயணத்தைத் தொடர்வதாகவும் இருந்தது.



# எந்நேரமும் லிம்கா நேரம்



## விருந்தினர் வரும் நேரம்

லிம்காவின் இனிப்பும்
உப்பும் கலந்த இணையற்ற
சுவை விருந்தினர்
மனதை கொள்ளை கொள்ளும்.



## தாகம் தணிக்கும் நேரம்

லிம்காவில் அடங்கியுள்ள
ஐசோடானிக் உப்பு
உங்கள் தாகத்தை
தணிக்கிறது.



## கொட்டமடிக்கும் நேரம்

உல்லாசமாய் கொட்டமடிக்கும்
நேரங்களில் லிம்கா,
வாழ்விற்கு மேலும்
சுவை கூட்டுகிறது.



## பயணம் செய்யும் நேரம்

லிம்கா, கிருமிநீக்கம்
செய்யப்பட்ட பானமாகையால்,
பயணிகளுக்கு முற்றிலும்
பாதுகாப்பானது.




CONTAINS ADDED FLAVOUR. CONTAINS NO FRUIT JUICE/PULP. NO BVO USED.

# சிவகாமியின் சபதம்

பதினோராம் அத்தியாம்

**ஆயனச் சிற்பி**

வானளாவி வளர்ந்திருந்த மரங்களின் கிளைகள் நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் பரவிப் பின்னிக் கொண்டிருந்த வனப் பிரதேசத்தின் மத்தியில் அழகான சிற்ப வீடு ஒன்று காணப் பட்டது.

மனோகரமான காலை நேரம். சூரியோதயமாகி ஒரு ஜாமம் இருக்கும். ஓங்கி வளர்ந்திருந்த மரங்களின் உச்சியில் வஸந்த காலத்தில் இளந்தென்றல் உலாவியபோது 'சலசல' வென்று இலைகள் அசையும் இனிய ஓசை எழுந்தது.

பட்சி ஜாலங்களின் கண்டங்களிலிருந்து விதவிதமான சுருதி பேதங்களுடன் மதுர மதுரமான அமுத கீதங்கள் பெருகிக் கொண்டிருந்தன.

வீட்டைச் சுற்றியிருந்த மரங்களின் அடியில் ஆங்காங்கே பெரிய பெரிய கருங்கற்கள் கிடந்தன. அந்தக் கருங்கற்களில், தனித் தனியாகவும் இருவர் மூவராகவும் இளம் சிற்பிகள் அமர்ந்து கையில் கல்லுளியுடன் வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

இளம் சிற்பிகள் கருங்கற்களில் கல்லுளியினால் வேலை செய்த போது உண்டான 'கல்கல்' என்ற ஓசை, இலைகள் அசையும் ஓசையுடனும் பட்சிகளின் மதுர கானத்துடனும் கலந்து, செவி கொடுத்துக் கேட்பவர்களுக்கெல்லாம் நாத போதையை உண்டாக்கிற்று.

இத்தகைய கீதப் பிரவாகத்துக்கிடையே, திடீரென்று வீட்டிற்குள்ளிருந்து 'ஜல்ஜல்' என்ற சத்தம் வந்தது.

இளம் சிற்பிகள் அவ்வளவு பேரும் சொல்லி வைத்தாற்போல் வேலையை நிறுத்திவிட்டுக் காது கொடுத்துக் கேட்டார்கள். அவர்களுடைய முகங்கள் எல்லாம் ஏககாலத்தில் மலர்ந்தன.

ஏனெனில், அந்த 'ஜல்ஜல்' ஒலியானது, அவர்களுடைய ஆச்சாரிய சிற்பியின் மகள் சிவகாமி தேவியின் பாதச் சதங்கை ஒலியென்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். மூன்று நாளாக ஏதோ ஒரு காரணத்தினால் சோகத்தில் ஆழ்ந்திருந்த சிவகாமி இன்றைக்குச் சோகம் நீங்கி மீண்டும் நடனம் செய்ய ஆரம்பித்திருக்கிறாள் என்பதை அந்த 'ஜல் ஜல்' ஒலி பறையறைந்து தெரிவித்தது.

சற்று நேரம் அந்த இனிய ஒலியைக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, ஒருவரோடொருவர் முக பாவத்தினாலேயே சம்பாஷித்து விட்டு, இளம் சிற்பிகள் மறுபடியும் தங்கள் வேலையை ஆரம்பித்தார்கள்.

ஆயனரின் சிற்பக் கோயிலுக்குள்ளே நாம் பிரவேசிப்பதற்கு முன்னால், அவர் அந்த நடுக்காட்டில் வந்து வீடு கட்டிக் கொண்டு வசிக்க நேர்ந்ததேன் என்பதைச் சிறிது கவனிப்போம்.

தெற்கே பாண்டிய நாட்டின் எல்லையிலிருந்து வடக்கே கிருஷ்ணா நதி வரையில் பரந்திருந்த பல்லவ ராஜ்யத்தில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு மகேந்திரவர்ம சக்கரவர்த்தி சிறப்புடன் ஆட்சி புரிந்து கொண்டிருந்த காலத்தில்,

தமிழகமெங்கும் ஓர் அதிசயமான 'கலை மறுமலர்ச்சி' ஏற்பட்டிருந்தது.

செந்தமிழ் நாடெங்கும் மகா சிற்பிகளும் சித்திரக் கலைஞர்களும் தோன்றிச் சிற்ப, சித்திரக் கலைகளை அற்புதமாக வளர்த்து வந்தார்கள். குன்றுகளைக் குடைந்து கோயில்களாக்கும் கலையும், கற்பாறைகளிலே சிற்பங்களைச் செதுக்கும் கலையும் எங்கெங்கும் பரவி வந்தன.

அதே சமயத்தில் தெய்வத் தமிழகத்தில் சைவ, வைஷ்ணவ சமயங்கள் புத்துயிர் பெற்றுத் தழைக்கத் தொடங்கின. சிவனடியார்களும், வைஷ்ணவப் பெரியார்களும் ஸ்தல யாத்திரை என்ற வியாஜத்தில் தேசமெங்கும் பிரயாணம் செய்து, சைவ வைஷ்ணவ சமயங்களைப் பரப்பி வந்தார்கள்.

இது காரணமாகத் தமிழகத்தில் சென்ற சில நூற்றாண்டு காலமாய் வேரூன்றியிருந்த புத்த, சமண சமயங்களுக்கும் சைவ, வைஷ்ணவ சமயங்களுக்கும் தீவிரப் போட்டி ஏற்பட்டது. அந்தந்தச் சமயத் தத்துவங்களைப் பற்றிய விவாதங்கள் எங்கே பார்த்தாலும் காரசாரமாக நடந்து கொண்டிருந்தன.

மேற்படி சமயப் போட்டியானது கலைத் துறையில் மிகுதியாகக் காணப்பட்டது. ஒவ்வொரு சமயத்தினரும் தங்கள் தங்கள் சமயத்தையொட்டிக் கலைகளை வளர்க்க முயன்றார்கள்.

சைவ வைஷ்ணவர்கள் சிவன் கோயில்களையும், பெருமாள் கோயில்களையும் நாடெங்கும் நிர்மாணிக்க விரும்பினார்கள். புத்தர்களும் சமணர்களும் எங்கெங்கும் புத்த விஹாரங்களையும் சமணப் பள்ளிகளையும் நிறுவத் தொடங்கினார்கள்.

பாறைகளுக்கும் குன்றுகளுக்கும்கூடப் பெரிய போட்டி ஏற்பட்டது! ஒவ்வொரு மதத்தினரும், "இது எங்கள் குன்று; எங்கள் பாறை!" என்று பாத்தியதை கொண்டாடினார்கள். அந்தப் பாறைகளையும் குன்றுகளையும் குடைந்து கோயில்களையும் விஹாரங்களையும் நிர்மாணிக்கும் ஆசையினால்தான் அத்தகைய போட்டி உண்டாயிற்று.

அதே மாதிரி சிற்பிகள், சித்திரக் கலைஞர்களின் விஷயத்திலும் பலமான போட்டி ஏற்பட்டிருந்தது. பெயர்பெற்ற சிற்பிகளிடமும் சித்திரக் கலைஞர்களிடமும் நாலு மதத்தினரும் வந்து "எங்கள் கோயிலில் வேலை செய்யுங்கள்!" என்று மன்றாடி அழைத்தார்கள்.

"அத்தகைய பலமான போட்டிக்கு ஆளாகியிருந்தவர்களில் ஆயனச் சிற்பியும் ஒருவர்.

காஞ்சிமா நகரில் பிறந்து வளர்ந்து கலை பயின்ற ஆயனர், இளம் பிராயத்திலேயே 'மகா சிற்பி' என்று பெயர் பெற்று விட்டார். ஆயனருடைய புகழ் வளர வளர, அவருடைய வேலைக்குக் குந்தகம் அதிகமாக ஏற்பட்டுக் கொண்டிருந்தது. மகேந்திர சக்கரவர்த்தி முதல் சாதாரண ஜனங்கள் வரையில் அடிக்கடி அவருடைய விடுதிக்கு வருவதும் அவருடைய சிற்ப வேலைகளைப் பாராட்டுவதுமாக இருந்தார்கள். வந்தவர்களை வரவேற்று உபசரிப்பதிலேயே அவருடைய காலம் அதிகமாகச் செலவழிந்து வந்தது.

சைவ குலத்தில் பிறந்த ஆயனர், இயற்கையாகச் சைவ மதப் பற்றுக் கொண்டிருந்தார். அதோடு, பழந் தமிழ்நாட்டுச் சிற்ப வடிவங்களில் சிறந்த ஸ்ரீ நடராஜ வடிவம் அவருடைய உள்ளத்தைப் பூரணமாய்க் கவர்ந்திருந்தது. எனவே, அவருடைய சிற்ப வேலைகள் பெரும்பாலும் சைவ மதத்தைத் தழுவியனவாக இருந்தன. இது காரணமாக, புத்த பிக்ஷுக்களும் சமண முனிவர்களும் ஆயனரைத் தங்கள் தங்கள் சமயத்தில் சேர்த்துக் கொள்ள இடைவிடாத முயற்சி செய்த வண்ணமிருந்தார்கள்.

இந்தத் தொல்லையிலிருந்து விடுபடுவதற்காக, ஆயனச் சிற்பியார் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். அதாவது காஞ்சி நகரை விட்டுச் சென்று எங்கேயாவது நடுக் காட்டில் ஏகாந்தமான பிரதேசத்தில் வீடு அமைத்துக் கொண்டு வசிக்க வேண்டும் என்பதுதான்.

அவ்விதம் ஆயனர் தீர்மானித்ததற்கு இன்னொரு முக்கியமான காரணமும் இருந்தது. அந்த மகா சிற்பி, சிற்ப சித்திரக் கலைகளை நன்கு பயின்றதோடு, பரத சாஸ்திரம் என்னும் மகா சமுத்திரத்தையும் கரை கண்டவராக இருந்தார்.

அவருடைய ஏக புதல்வி சிவகாமி குழந்தையாயிருந்த போதே நடனக் கலையில் அவள் சிறந்த தேர்ச்சியடைவாள் என்பதற்கு அறிகுறிகள் காணப்பட்டன.

ஆயனருடைய உள்ளத்தில் ஒரு பெரிய ஆசை உதயமாயிற்று.

'குழந்தை சிவகாமிக்குப் பரத நாட்டியக் கலையில் பயிற்சி அளிக்க வேண்டும்; அவளுடைய நடனத் தோற்றங்களைப் பார்த்து அவற்றைப் போல் ஜீவகலையுள்ள நவநவமான நடன வடிவங்களைச் சிலை

அமரர் கல்கி

களிலே அமைக்க வேண்டும்' என்னும் மனோரதம் அவருக்கு உண்டாகி, நாளுக்கு நாள் வலுப்பெற்று வந்தது. நகரத்தை விட்டு எங்கேயாவது ஏகாந்தமான பிரதேசத்துக்குப் போனாலொழிய மேற்படி மனோரதம் நிறைவேறுவது சாத்தியமாகாது என்பதையும் அவர் நன்கு உணர்ந்தார்.

ஆயனர் தமது விருப்பத்தை மகேந்திர சக்கரவர்த்தியிடம் விண்ணப்பித்துக் கொண்டபோது, கலைஞர்களுடைய விசித்திர குணாதிசயங்களை நன்கு அறிந்தவரான மகேந்திர பல்லவர் உடனே அவருடைய யோசனைக்குச் சம்மதம் அளித்தார். அதற்கு வேண்டிய சௌகரியங்களையும் செய்து கொடுக்க முன்வந்தார்.

காஞ்சியிலிருந்து ஒரு காத தூரத்தில், ராஜபாட்டையிலிருந்து விலகியிருந்த அடர்ந்த வனப் பிரதேசம் ஒன்றை ஆயனர் தேர்ந்தெடுத்து, அங்கே வீடுகட்டிக் கொண்டு, குழந்தை சிவகாமியுடனும், பதியை இழந்திருந்த தம் தமக்கையுடனும் வசிக்கலானார்.

எந்த நோக்கத்துடன் ஆயனர் அந்த ஏகாந்தமான பிரதேசத்தைத் தேடி வந்தாரோ அந்த நோக்கம் சில அம்சங்களில் நன்கு நிறைவேறி வந்தது. சிவகாமி நாட்டியக் கலையில் நாளுக்கு நாள் தேர்ச்சி அடைந்து வந்தாள். அவளுடைய நடனத் தோற்றங்களைப் பார்த்து ஆயனர் முதலில் அவை போன்ற சித்திரங்கள் வரைந்து கொண்டார். பிறகு அந்தச் சித்திரங்களைப் போலவே அதிசயமான ஜீவ களை பொருந்திய நடன உருவங்களைக் கல்லிலே அமைக்கலானார்.

ஆயனர் ஏகாந்தமான பிரதேசத்துக்குப் போன போதிலும், வெளி உலகம் அவரை அடியோடு தனியாக விட்டு விடவில்லை.

கலைஞர்களும், கலைகளில் பற்றுடையவர்களும் காட்டு வழிகளிலே புகுந்து ஆயனர் வீட்டை அடிக்கடி தேடிச் சென்றார்கள். அவ்வாறு சென்றவர்களில் முக்கியமானவர்கள் மகேந்திர சக்கரவர்த்தியும் அவருடைய குமாரர் மாமல்லருந்தான்.

இவர்கள் ஆயனர் வீடு செல்லுவதற்கு முக்கியமான முகாந்திரமும் இருந்தது.

சக்கரவர்த்தியும் மாமல்லரும் ஒருநாள் துறை முகத்துக்குச் சென்றிருந்த போது, கடற்கரையோரமாகப் பரந்து கிடந்த குன்றுகளும் பாறைகளும் அவர்களுடைய கவனத்தைக் கவர்ந்தன. அந்தக் குன்றுகளிலும் பாறைகளிலும் விதவிதமான சிற்ப வேலைகளைச் செய்து அந்தக் கடற்கரையை ஒரு சொப்பன லோகமாகச் செய்துவிட வேண்டுமென்று அவர்கள் தீர்மானித்தார்கள்.





இந்த யோசனை முதன் முதலில் குமார சக்கர வர்த்தியின் மனத்தில் தோன்றியபடியால் அந்தத் துறைமுகப் பிரதேசத்திற்கு மாமல்லபுரம் என்ற பெயரைச் சக்கரவர்த்தி வழங்கி சிற்ப வேலைகள் தொடங்கச் செய்தார்.

தமிழகமெங்குமிருந்தும் ஆயிரக்கணக்கான சிற்பிகள் அங்கு வந்து வேலை செய்யத் தொடங்கினார்கள்.

இந்த வேலைகள் சம்பந்தமாக ஆயனரிடம் கலந்து ஆலோசிப்பதற்கும், அவ்வப்போது

அவரை அழைத்துச் சென்று நடந்திருக்கும் வேலைகளைக் காட்டுவதற்குமாகச் சக்கரவர்த்தியும் மாமல்லரும் அவருடைய வீட்டுக்கு அடிக்கடி வரவேண்டியிருந்தது. அப்படி வரும்போதெல்லாம் ஆயனரின் நடனச் சிற்பங்களைப் பார்த்து அவர்கள் பாராட்டியதுடன் சிவகாமியை நடனமாடச் சொல்லியும் பார்த்து மகிழ்ந்தார்கள்.

சிவகாமி மங்கைப் பருவத்தையடைந்து நடனக் கலையில் ஒப்பற்ற தேர்ச்சியும் அடைந்த பிறகு, காஞ்சி ராஜ சபையில் அவளுடைய நடன அரங்கேற்றத்தை நடத்த வேண்டுமென்று சக்கரவர்த்தி ஆக்ஞாபித்தார்.

அந்த அரங்கேற்றம் எப்படி இடையில் தடைப்பட்டுப் போயிற்று என்பதை இந்த வரலாற்றின் ஆரம்ப அத்தியாயங்களில் பார்த்தோம்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# தெய்வமாக் கலை

அரண்ய மத்தியில் அமைந்த ஆயனர் வீட்டின் உட்புறம் கண்கொள்ளாக் காட்சியளித்தது.

வெளித் தாழ்வாரத்தையும் முன் வாசற்படியையும் தாண்டி உள்ளே சென்றதும், நாலு புறமும் அகன்ற கூடங்களும், நடுவில் விசாலமான முற்றமாக அமைந்த பெரிய மண்டபமும் காணப்பட்டன. முற்றத்துக்கு மேலே மண்டபம் எடுப்பாகத் தூக்கிக் கட்டப்பட்டிருந்தது. கூடங்களின் ஓரங்களில் சிற்ப வேலைப்பாடு அமைந்த தூண்கள் நின்றன. அவை, மேல் மண்டபத்தைத் தாங்குவதற்காக நின்றனவோ, அல்லது அலங்காரத்துக்காக நின்றனவோ என்று சொல்ல முடியாமல் இருந்தது.

நாலு புறத்துச் சுவர்களிலும் விதவிதமான வர்ணங்களில் அழகழகான சித்திரங்கள் காணப்பட்டன. அந்தச் சித்திரங்களில் ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் நாதாந்த நடனம், தாண்டவ நடனம், குஞ்சித நடனம், ஊர்த்வ நடனம் ஆகிய தோற்றங்கள் அதிகமாக இருந்தன. அம்மாதிரியே ஓர் அழகிய இளம் பெண்ணின் பலவகை அபிநய நடனத் தோற்றங்களும் அதிகமாகக் காட்சியளித்தன.

முற்றத்தில் பெரிய கருங்கற்களும், உடைந்த கருங்கற்களும், பாதி வேலை செய்யப் பெற்ற கருங்கற்களும் கிடந்தன. ஒரு பக்கத்துக் கூடத்தில் வேலை பூரணமாகி ஜீவ களையுடன் விளங்கிய சிலைகள் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. சித்திரங்களில் தோன்றிய அதே இளம் பெண்ணின் மோகன வடிவந்தான் அந்தச் சிலைகளிலும் விளங்கின. ஒவ்வொரு சிலையும் பரத சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் நூற்றெட்டு அபிநயத் தோற்றங்களில் ஒன்றைக் குறிப்பிடுவதாயிருந்தது.

ஆனால், நாம் குறிப்பிடும் சமயத்தில் அந்தச் சிற்ப மண்டபத்துக்குள் பிரவேசிப்பவர்கள் மேற்கூறிய சிற்ப அதிசயங்களையெல்லாம் கவனம் செலுத்திப் பார்த்திருக்க முடியாது. அவர்களுடைய கருத்தையும் கண்களையும் அம் மண்டபத்தின் ஒரு பக்கத்துக் கூடத்தில் தோன்றிய காட்சி பூரணமாகக் கவர்ந்திருக்கும்.

சித்திரங்களிலும் சிலைகளிலும் தோற்றமளித்த இளம் பெண்ணானவள் அங்கே சுயமாகவே தோன்றி, கால் சதங்கை 'கலீர் கலீர்' என்று சப்திக்க நடனமாடிக் கொண்டிருந்தாள். அவளுக்கெதிரே சற்றுத் தூரத்தில் ஆயனச் சிற்பியார் உட்கார்ந்து கண் கொட்டாத ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்.

பார்த்துக் கொண்டிருந்தவர் திடீரென்று "நில்!" என்றார். அந்த க்ஷணமே சிவகாமியும் ஆட்டத்தை நிறுத்தி, அப்போது நின்ற நிலையிலேயே அசையாமல் நின்றாள்.

ஆயனர் கையில் கல்லுளியை எடுத்தார். அவர் அருகில் ஏறக்குறைய வேலை பரிபூரணமான ஒரு சிலை கிடந்தது. அதன் கண் புருவத்தின் அருகே ஆயனர் கல்லுளியை வைத்து இலேசாகத் தட்டினார். மறுபடியும் சிவகாமியை நிமிர்ந்து பார்த்து, "சற்று இரு! அம்மா!" என்று கூறி, மேலும் அச்சிலையின் புருவங்களில் சிறிது வேலை செய்தார். பிறகு, "போதும், குழந்தாய்! இங்கே வந்து உட்கார்!" என்றார்.

சிவகாமி ஆயனர் அருகில் சென்று உட்கார்ந்தாள். அவள் முகத்தில் முத்து முத்தாகத் துளித்திருந்த வியர்வையை ஆயனர் தம் அங்கவஸ்திரத்தினால்

துடைத்துவிட்டு, அம்மா! சிவகாமி! பரத சாஸ்திரத்தை எழுதினாரே, அந்த மகா முனிவர் இப்போது இருந்தால் உன்னிடம் வந்து அபிநயக் கலையின் நுட்பங்களைக் கற்றுக் கொள்ள வேண்டியதாயிருக்கும். கண் பார்வையிலும், புருவத்தின் நெறிப்பிலும் என்ன அற்புதமாய் நீ மனோபாவங்களைக் கொண்டு வந்துவிடுகிறாய்? நடனக் கலைக்காகவே நீ பிறந்தவள்!'' என்றார்.

''போதும் அப்பா, போதும். எனக்கு ஒன்றுமே பிடிக்க வில்லை!'' என்று அலுப்பான குரலில் கூறினாள் சிவகாமி.

''பிடிக்க வில்லையா? என்ன பிடிக்க வில்லை?'' என்று ஆயனர் வியப்புடன் கேட்டார்.

''நான் பெண்ணாய்ப் பிறந்ததே பிடிக்க வில்லை!'' என்றாள் சிவகாமி.

''சிவகாமி! இது என்ன இது? மூன்று நாளாகத்தான் உடம்பு நன்றாக இல்லை என்று சொன்னாய். இன்றைக்கு ஏன் இத்தனை வெறுப்பாய்ப் பேசுகிறாய்? என் பேரில் ஏதாவது கோபமா?'' என்று ஆயனர் பரிவுடன் கேட்டார்.

''உங்கள் பேரில் எனக்கு என்ன கோபம், அப்பா! பரத சாஸ்திரம் என்று ஒன்றை எழுதினாரே, அந்த முனிவரின் பேரில்தான் கோபம். எதற்காக இந்தக் கலையைக் கற்றுக் கொண்டோம் என்றிருக்கிறது'' என்று கூறிப் பெருமூச்சு விட்டாள் சிவகாமி.

''ஆகா! என்ன வார்த்தை சொன்னாய்? பரத முனிவரின் பேரில் கோபமா? சிவகாமி! நிருத்யக் கலையில் நீ அபூர்வமான தேர்ச்சியடைந்திருக்கிறாய். ஆனால், அந்தக் கலையின் பெருமையை நீ உணரவில்லை. நிருத்யக் கலைதான் மற்ற எல்லாக் கலைகளுக்கும் அடிப்படை. சிவகாமி! அதனாலேதான் இதைத் தெய்வமாக் கலையென்றும் பிரம்ம தேவர் பரத முனிவருக்கு அருளிய 'நாட்டிய வேதம்' என்றும் சொல்கிறார்கள். நிருத்யக் கலையிலிருந்துதான் சித்திரக்கலை உண்டாயிற்று. அதிலிருந்துதான் சிற்பக் கலை வளர்ந்தது. இசைக் கலைக்கும் நிருத்யக் கலைதான் ஆதாரம். பரத சாஸ்திரம் அறியாதவர்கள் சங்கீதத்தின் ஜீவ தத்துவத்தை அறிய முடியாது. அம்மா! அன்றைக்கு ருத்ராச்சாரியாரே இதை ஒப்புக் கொண்டு விட்டார்.....''

''யார் ருத்ராச்சாரியார்? சக்கரவர்த்திக்குப் பக்கத்தில் பெரிய வெள்ளைத்தாடியோடு உட்கார்ந்திருந்தாரே, அவரா?''

''ஆம்; அவர்தான். நமது மகேந்திர சக்கரவர்த்தியின் சங்கீத ஆசிரியர். சங்கீதத்தைப் பற்றிச் சாஸ்திரம் எழுதியிருக்கிறார். இப்போது கிழவருக்கு வயது அதிகமாகிவிட்டது. இருந்தாலும் தடியை ஊன்றிக் கொண்டு



● 1989 ஆம் ஆண்டின் இந்திய இரயில்வே சட்டத்தின்படி இரயிலில் டிக்கெட்டில்லாத பயணிக்கு அபராதம் ரூ. 50. ஆனால் பிச்சை எடுப்பவர்களுக்கு அபராதம் ரூ. 3000!

— எஸ். ராமன்.

உன்னுடைய அரங்கேற்றத்துக்கு வந்திருந்தார். உன்னுடைய ஆட்டத்தைப் பார்த்துப் பிரமித்துப் போய்விட்டார். சபை கலைந்தவுடனே அவர் என்னைக் கூப்பிட்டு, 'உன் மகள் நன்றாயிருக்க வேண்டும். அவள்தான் இன்று என் குருட்டுக் கண்களைத் திறந்து, ஒரு முக்கியமான உண்மையை உணரச் செய்தாள். நான் சங்கீத சாஸ்திரம் எழுதியிருக்கிறேனே, அதெல்லாம் சுத்தத் தவறு. பரத சாஸ்திரம் பயிலாமல் நான் சங்கீதத்தைப் பற்றி எழுதியதே பெரும் பிசகு!' என்று சொன்னார். சங்கீத மகாசாகரமாகிய ருத்ராச்சாரியாரே இவ்வாறு சொல்லுகிறாரென்றால்...''

''அப்பா! யார் என்ன சொன்னால் என்ன? எனக்கு என்னமோ ஒன்றும் பிடிக்க வில்லை. பரதம், சங்கீதம், சிற்பம், சித்திரம் — இவற்றினால் எல்லாம் உண்மையில் என்ன பிரயோஜனம்?''

''சிவகாமி! நீதானா கேட்கிறாய், கலைகளினால் என்ன பிரயோஜனம் என்று? மகளே! நான் கேட்கிறதற்கு விடை சொல். வஸந்த காலத்தில் மரங்களும் செடிகளும் பூத்துக்குலுங்குவதனால் என்ன பிரயோஜனம்? பௌர்ணமி இரவில் பூரண சந்திரன் பால் நிலவைப் பொழிகிறதே, அதனால் என்ன உபயோகம்? மயில் ஆடுவதனாலும், குயில் பாடுவதனாலும் யாது பயன்? கலைகளின் பயனும் அவை போன்றதுதான். கலைகளைப் பயில்வதிலேயே ஆனந்தம் இருக்கிறது. அந்த ஆனந்தத்தை நீ அனுபவித்ததில்லையா? இன்றைக்கு ஏன் இப்படிப் பேசுகிறாய், அம்மா?''

சிவகாமி மறுமொழி சொல்லாமல் எங்கேயோ பார்த்த வண்ணம் இருந்தாள். காதளவு நீண்ட அவளுடைய கரியகண்களில் முத்துப்போல் இரு கண்ணீர்த்

துளிகள் துளித்து நின்றன.

இதைப் பார்த்த ஆயனர் திடுக்கிட்டவராய்ச் சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு, சிவகாமியின் கூந்தலை அருமையுடன் தடவிக் கொடுத்த வண்ணம் கூறினார்:

''அம்மா! எனக்குத் தெரிந்தது... உன்னை அறியாப் பிராயத்துச் சிறு குழந்தையாகவே நான் இன்னமும் எண்ணிக் கொண்டிருக்கிறேன். அது தவறுதான். உனக்குப் பிராயம் வந்து உலகம் தெரிந்து விட்டது. உன்னை ஒத்த பெண்கள் கல்யாணம் செய்து கொண்டு குடியும் குடித்தனமுமாய் வாழ்கிறார்கள் என்பதைப் பார்த்திருக்கிறாய். உன் அன்னை உயிரோடு இருந்திருந்தால், இத்தனை நாளும் உனக்குக் கல்யாணம் செய்து வைக்கும்படி என் பிராணனை வாங்கியிருப்பாள். ஆனால், நானும் அந்தக் கடமையை மறந்து விடவில்லை. சிவகாமி! பரத சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் நூற்றெட்டு அபிநயத் தோற்றங்களில் நாற்பத்தெட்டு தோற்றங்களைச் சிலைகளில் அமைத்துவிட்டேன். இன்னும் அறுபது சிலைகள் அமைந்தவுடனே, உனக்குத் தக்க மணாளனைத் தேடிக் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டு மறுகாரியம் பார்ப்பேன்!''



இவ்விதம் ஆயனர் சொன்னபோது சிவகாமி கண்களைத் துடைத்துக்கொண்டு அவரை நிமிர்ந்து பார்த்து, ''கல்யாணப் பேச்சை எடுக்க வேண்டாம் என்று எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன். அப்பா! எனக்குக் கல்யாணமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். உங்களைத் தனியாக விட்டுவிட்டு நான் போவேனா? அத்தகைய கிராதகி அல்ல நான்!'' என்றாள்.

உண்மை என்னவென்றால், சிவகாமியைக் கல்யாணம் பண்ணிக் கொடுப்பதில் ஆயனருக்கு அந்தரங்கத்தில் விருப்பம் கிடையாது. குழந்தைப் பிராயத்திலிருந்து அவளைக் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்தவர் அவர். கல்வியும் கலையும் பயில்வித்தவர் அவர். பெண்ணை விட்டுப் பிரிந்து ஒரு நிமிஷங்கூடத் தாம் உயிர் வாழ முடியாது என்று ஆயனர் எண்ணினார். ஆனாலும், என்றைக்காவது ஒரு நாள் அவளைக் கல்யாணம் செய்து கொடுத்துத்தானே ஆக வேண்டும் என்னும் நினைவு அடிக்கடி அவர் மனத்தில் உறுத்திக் கொண்டிருந்தது.

எனவே, சிவகாமியின் கல்யாணத்தைப் பற்றி அவர் சில சமயம் பிரஸ்தாபிப்பது உண்டு. அப்போதெல்லாம் சிவகாமி, ''எனக்குக் கல்யாணம் வேண்டாம்'' என்று மறுமொழி கூறுவதைக் கேட்பதில் அவருக்கு மிகவும் ஆனந்தம்.

இன்றைக்கும் சிவகாமியின் மறுமொழி ஆயனருக்கு ஆறுதலை அளித்தது. எனினும், அவர் மேலும் தொடர்ந்து, ''அதெப்படி, சிவகாமி! மணம் செய்து கொடுக்காமலே நான் உன்னை என் வீட்டிலேயே வைத்துக் கொண்டிருந்தால் நன்றாயிருக்குமா? உலகம் ஒப்புக் கொள்ளுமா? ஒரு தகுந்த பிள்ளையாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டியதுதான். ஆனால் இந்த யுத்தம் ஒன்று வந்து தொலைந்திருக்கிறது. இதனால் நமது குமார சக்கரவர்த்தியின் திருமணம் கூடத் தடைப்படும் போலிருக்கிறது.''

சிவகாமியின் முகத்தில் அப்போது ஒரு அதிசயமான மாறுதல் காணப்பட்டது. ஆங்காரத்தினால் ஏற்பட்ட கிளர்ச்சி அந்த அழகிய முகத்தை இன்னும் அழகு படுத்தியது.

''என்ன அப்பா சொல்கிறீர்கள்? யாருக்குத் திருமணம்? குமார சக்கரவர்த்திக்கா?'' என்றாள்.

''ஆமாம்! மாமல்லருக்கு இந்த ஆண்டில் திருமணம் நடத்த வேண்டுமென்று மகாராணிக்கு மிகவும் ஆசையாம். யுத்தம் முடிந்த பிறகுதான் கல்யாணம் என்று சக்கரவர்த்தி சொல்லி விட்டாராம். இதனால் புவன மகாதேவிக்கு மிகுந்த வருத்தம் என்று கேள்வி.''

சிவகாமி குரோதம் ததும்பிய குரலில், ''அப்பா! யார் வேணுமானாலும் கல்யாணம் செய்து கொள்ளட்டும்! அல்லது செய்து கொள்ளாமல் இருக்கட்டும். நான் என்னவோ கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை'' என்றாள்.

ஆயனர் மீண்டும், ''அதெப்படி முடியும், சிவகாமி! சைவ குலத்துப் பெண்ணை மணம் செய்து கொடுக்காமல் எப்படி வைத்திருக்கலாம்? நாலு பேர் கேட்டால், நான் என்ன சொல்லுவது?'' என்றார்.

''அப்பா! நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் புத்த மதத்தைச் சேர்ந்து பிக்ஷுணியாகி விடுகிறேன். அப்போது உங்களை ஒருவரும் ஒன்றும் கேட்கமாட்டார்கள்'' என்றாள் சிவகாமி.

அவள் இவ்விதம் சொல்லி வாய் மூடிய அதே சமயத்தில், வாசற்புறத்தில் ''புத்தம் சரணம் கச்சாமி'' என்று குரல் கேட்டது.

இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். வாசற்படிக்கு அருகில் நாகநந்தி அடிகளும், அவருக்குப் பின்னால் வியப்புடன் உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டு பரஞ்சோதியும் நின்று கொண்டிருந்தார்கள்.

(தொடரும்)

# அர்ச்சனா நடிக்கிறார்; அவார்டு கிடைக்குமா?

●● பிரபலங்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை வைத்துப் படமெடுத்தால் சக்கைப் போடு போடுமென்பதற்கு இன்னோர் உதாரணம் ''கர்தவ்யம்'' என்ற தெலுங்குப் படம். இதன் கதை பெண் போலீஸ் அதிகாரி கிரண்பேடியை மையமாகக் கொண்டது. போலீஸ் அதிகாரியாக நடித்திருப்பவர் விஜயசாந்தி. இதில் நடிப்பதற்காக கிரண்பேடியை நேரில் சந்தித்துப் பேசிப் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டாராம். ''வேண்டுமானால் பாருங்கள்... இந்தப் படத்தைப் பார்க்கிற பெற்றோர்களெல்லாம் தங்கள் மகள்களை எப்படியாவது போலீஸ் அதிகாரிகளாக்கியே தீர வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டு உழைக்கப் போகிறார்கள்'' என்கிறார் விஜயசாந்தி.



அதே படம் 'வைஜயந்தி ஐ.பி.எஸ்.' என்று தமிழிலும் வரத்தானே போகிறது... பார்ப்போம்!

●● பதினைந்தே நாட்களில் 'மட்டி மனுஷுலு' (மண்ணின் மைந்தர்கள்) என்ற தெலுங்குப் படம் உருவாகியுள்ளது. இதில் அர்ச்சனா 'போச்சம்மா' என்ற சித்தாள் கேரெக்டரில் நடித்துள்ளார். ஹைதராபாத் நகரின் நடுப் பகுதியான 'பஞ்ச குட்டா' என்ற இடத்தில் கோடிக்கணக்கான ரூபாய்ச் செலவில் கட்டட வேலை நடந்து வரும் இடத்திலேயே படம் முழுவதையும் எடுத்து முடித்து விட்டார்கள். கட்டட வேலை செய்யும் ஒரு சித்தாள் பெண்ணின் ஏக்கங்களையும் எதிர்பார்ப்புக்களையும் அவள் வாழ்க்கையின் சிக்கல்களையும் அப்படியே படம் பிடித்துள்ளார்கள். 'தாசி' என்ற விருது பெற்ற படத்தினை உருவாக்கிய அதே யூனிட்தான் இந்தப் படத்தைத் தயாரித்துள்ளது.

சித்தாளாக நடித்துள்ள அர்ச்சனா, "இது முழுக்க முழுக்க ஒரு கலைப்படம். நான் மிகுந்த ரிஸ்க் எடுத்துச் செய்திருக்கிறேன். அந்தக் கட்டட வேலை பல மாதங்களாக நடந்து வருகிறது. அதில் வேலை செய்பவர்கள் அனைவருக்கும் பக்கத்திலேயே குடிசைகள் போட்டுக் கொடுத்துள்ளார்கள். கேரக்டர் ஸ்டடி பண்ணுவதற்காக நான் முழுக்க முழுக்கப் பதினைந்து நாட்கள் அவர்கள் கூடவே ஒரு குடிசையில் இருந்தேன். அவர்கள் வேலைக்குப் போகும் போது கூடவே போனேன். அவர்கள் சாப்பிடுவதையே சாப்பிட்டு, இரவு அவர்கள் எதையெதைப் பற்றிப் பேசிக் கொள்கிறார்கள் என்று கவனித்து... அப்பப்பா!

"அந்தப் பதினைந்து நாட்களில் நான் அவர்களில் ஒருத்தியாக ஆகி விட்ட பிறகு தான் ஷூட்டிங் ஆரம்பமானது. என்னுடைய காஸ்ட்டியூம்ஸ் அத்தனையும் அந்தத் தொழிலாளர்களிடமிருந்துதான் வாங்கப்பட்டது. அதாவது அவர்கள் யூஸ் பண்ணுகிற அதே டிரெஸ். அதில் எங்களுக்கு ஏற்பட்ட சந்தோஷம் அளவு கடந்தது. சினிமா என்கிற மகத்தான மீடியாவை உரிய முறையில் கையாளுகிறோம் என்ற சந்தோஷம்! நிச்சயம் அவார்டு கிடைக்குமென்றும் நம்புகிறேன்" என்றார் பெருமிதத்தோடு.

சந்திப்பு: **எஸ். பாலு**

---

## மன்னனைப் போல் வாழ...



சில மாணவர்கள் அறிஞர் செஸ்டர்டனிடம், "நாங்கள் பிற்காலத்தில் அரசனாக வாழ என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டனர்.

செஸ்டர்டன் கூறினார்: "முதல் இருபது ஆண்டுகள் உங்கள் பெற்றோருக்கும், ஆசிரியர்களுக்கும் பணிந்து அடிமை போல நடக்க வேண்டும். அப்படி நடந்து கொண்டால் அடுத்து வரும் எண்பது ஆண்டுகளில் ஓர் அரசனைப் போல வாழலாம். மாறாக, முதல் இருபது ஆண்டுகளிலேயே ஓர் அரசனைப் போல நீங்கள் தருக்குடன் திரிவீர்களானால் அடுத்து வரும் எண்பது ஆண்டுகளில் ஓர் அடிமையைப் போல வருந்தி வாழ நேரிடும்.

— லட்சுமி சிவம்.

## கலை — இருவித பார்வைகள்

●● கைகளைக் கொண்டு உழைப்பவன் பாட்டாளி; கைகளோடு மூளையையும் பயன்படுத்தி உழைப்பவன் ,தொழில் வினைஞன். கைகள், மூளை இவற்றுடன் இதயத்தையும் செலுத்தி உழைப்பவன் கலைஞன்.

— ஜான் ரஸ்கின்.

●● ஒரு கவிதை எழுதுவதில் உள்ள பெருமை ஒரு நிலத்தை உழுவதிலும் இருக்கிறது.

— ஜார்ஜ் வாஷிங்டன்.

— லட்சுமி சிவம்.






உங்களது கடுமையான உழைப்புக்கும், மூளையின் வேலைக்கும் செறிவான ஊட்டமும் வலிமையுமே அடிப்படை. வெறும் நெல்லிக்காய் லேகியங்களும், சாதாரண டானிக்குகளும் இவற்றை நிறைவாகத் தரமுடியாது.

ஒப்பற்ற சக்தியைத் தினந்தோறும் உங்களுக்கு அளிக்கக் கூடிய அரிய மூலிகை டானிக் கிரௌன் காய கல்பம். இது பல்லாண்டு ஆராய்ச்சிக்குப் பின், சித்த வைத்திய முறையில் தயாரிக்கப்படும் சிறந்த மூலிகை டானிக்.

**கிரௌன் காயகல்பம் ரெகுலர்:**
கவனமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கல்ப மூலிகைகளான வல்லாரை, தூதுவளை, கரிசலாங்கண்ணி, பொற்சீந்தில், கடுக்காய், தான்றிக்காய், அஸ்வகந்தா, நெல்லிக்கனி ஆகியவற்றுடன் சுத்தமான தேன் மற்றும் முறையாகப் பாடம் செய்யப்பட்ட செந்தூரம், துத்தநாக பஸ்பங்களும் சேர்த்து இயற்கை முறையில் விசேஷமாகத் தயாரிக்கப் படுகிறது.

இது இரத்தத்தைச் சுத்தமாக்கி, உணவு எளிதில் ஜீரணம் ஆகவும், ஊட்டச் சத்துக்கள் இரத்தத்தில் சேரவும் உதவுகிறது. குடலைச் சுத்தம் செய்து வாயுக்கோளாறுகளை நிவர்த்தி செய்கிறது.

பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் நிறைய சக்தியும் ஊட்டமும் அளிக்க இரும்புச்சத்து நிறைந்தது.

**கிரௌன் காயகல்பம் ஸ்பெஷல்:**
கல்ப மூலிகைகள், தேன் ஆகியவற்றுடன் விசேஷ முறையில் பாடம் செய்யப்பட்ட தங்க பஸ்பம், வெள்ளி பஸ்பம், செந்தூரம், துத்த நாகம் உட்பட நவலோக பஸ்பங்கள் யாவும் சேர்க்கப்பட்டுள்ளன.

இதில் பல இயற்கை வைட்டமின்களும், தாது உப்புகளும் நிறைந்திருப்பதால் அதிகப்படியான வலிமையும் சுறுசுறுப்பும் எப்போதும் உங்களிடம் நிறைந்திருக்கும்.

| ரெகுலர் | ஸ்பெஷல் |
|---|---|
| இரும்புச்சத்து நிறைந்தது | தங்க பஸ்பம் அடங்கியது |
| 160 கி: ரூ. 18 | 150 கி: ரூ. 35 |
| 500 கி: ரூ. 54 | 500 கி: ரூ. 105 |
| (வரிகள் உட்பட) | (வரிகள் உட்பட) |







கிரௌன் காயகல்பம்
ஓயாமல் உழைத்திட ஒப்பற்ற சக்தி.

தயாரிப்பாளர்:
கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ், சென்னை-2.

Insight 739

° பம்பாய் விற்பனையாளர்: லக்ஷ்மி ஸ்டோர்ஸ், தாராவி மெயின் ரோடு, தாராவி, பம்பாய் — 17.
° பெங்களூர் விற்பனையாளர்: ஜெயின் பிரதர்ஸ், 146, O. K. ரோடு, கும்பார்பேட், பெங்களூர் — 2.

எல்லா மருந்துக் கடைகளிலும் மற்றும் ஜெனரல் ஸ்டோர் களிலும் கிடைக்கும்.

அலாரம் அடித்த போது, அருணாவுக்குத் தேவதைகள் 'இன்று விடுமுறை' என்று பாடிய இனிய கனவு கலைந்தது. தினத்தின் முதல் வார்த்தையாக 'ச்சே' என்று சொல்லிக் கொண்டு, எழுந்து நேராக பாத்ரூமுக்குச் சென்று, ஹீட்டர் போட்டு விட்டுக் கதவைத் திறந்து, பால் பாக்கெட் வாங்கி வந்து, காப்பி போட்டு விட்டு முரளியை எழுப்பினாள்.

அவன் இயந்திரம் போல் பல் உரசவும் முகம் சவரவும் செல்ல, அருணா ஜிபாவையும் நந்துவையும் எழுப்பி, அவைகளைத் தூக்கத்தோடு தூக்கிக் கொண்டு பாத்ரூமுக்குச் சென்று, 'கக்கா கக்கா' என்று முக்க



வைத்துவிட்டு அலம்பிக் குளிப்பாட்டித் துண்டு சுற்றி வெளியே அழைத்து வந்தாள்.

நெற்றியைச் சுருக்கிக் கொண்டு அழுதால் அடி விழும் என்ற பயத்துடன், குளிக்கப் பட்ட — உடுத்தப்பட்ட குழந்தைகள் தூக்கமும் விழிப்பும் தொட்ட, மலர்கள் போல அப்பா அம்மாவுக்குக் காத்திருந்தன.

நந்துவை 'ஹோம் ஒர்க்' பண்ண வைத்து விட்டு, முரளிக்குச் 'சொய் சொய்' என்று இரண்டு தோசை போட்டு, முதல் டிகாஷன் காப்பியுடன் டேபிளில் எடுத்து வைத்து விட்டு, அவன் சட்டை பாண்ட்டுக்கு இஸ்திரி போட்டு விட்டுக் குளிக்கப் போனாள்.

சரியாக இரண்டு நிமிஷத்தில் குளியலை முடித்துக் கொண்டு இரண்டு நிமிஷத்தில் புடைவை உடுத்திப் பொட்டுத் தொட்டுக் கொண்டு ஜிபாவுக்கு ஃப்ளாஸ்கில் வெந்நீரும், மில்கேரும் விதவித துண்டுகளும் டயாப்பர்களும் ஃபீடிங் பாட்டிலும் காம்புகளும் நந்துவுக்கு ரொட்டி வெட்டு, பேரிக்காய்த் துண்டு, ப்ரோட்டின் பிஸ்கட், கோக்கோமால்ட் என்று ஒரு ஜெட் பைலட்டுக்கு உண்டான சாமக் கிரியைகள் போல அனைத்தையும் பிரம்புக் கூடையில் பொருத்தினாள்.

முரளி காலை ஆட்டிக் கொண்டு பேப்பர் படித்து விட்டுக் கண்ணாடியில் பதினைந்து நிமிஷம் பார்த்துக் கொண்டு, ஜுக்காக சட்டை, பாண்ட் அணிந்து கொண்டு, ஸ்கூட்டருக்கு வர, கூடையை அதன் கழுத்தருகில் நிற்க வைத்துக் குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு, நந்து இருவருக்கும் நடுவில் பார்சல் போல ஒட்டிக் கொண்டு ஒருவழியாய் தினசரி திக்விஜயம் கிளம்பும் போது மணி பார்த்தாள், 7:45.

இன்று நிச்சயம் லேட்.

இன்றும்!

**டை**னி டாட்ஸ் பேபி சென்டரில் கதவு மூட இருந்தார்கள். குழந்தைகளை உள்ளே திணித்து விட்டுப் புறப்பட்டு ஆனந்த ராவ் சர்க்கிள் ட்ராஃபிக்கில் மாட்டிக் கொண்டு, ஆபீஸ் போய்ச் சேர 8:15. அவனை 'ட்ராப்' பண்ணி விட்டு முரளி தன் அலுவலகம் சென்றான்.

பதற்றத்துடன் லிஃப்ட்டுக்குக் காத்திருந்தாள். பாழாய்ப் போனது எற்றத்திலேயே இருந்தது. கடைசியாக இறங்கி வந்து தன் ஆறாவது மாடி மேசைக்கு வந்து சேர்ந்த போது 8:22.

"மேடம் மேனேஜர் கூப்பிடறாங்க."

பயத்துடன் உள்ளே சென்றாள். சீனிவாச மூர்த்தி ஒரு கண்ணாடி உருண்டையை உருட்டிக் கொண்டு சன்னல் வழியே வெளியே பார்த்துக் கொண்டிருந்தார்.

"உக்காருங்க அருணா" — இவளைப் பார்த்ததுமே முகம் இறுகியது.

"பரவாயில்லை ஸார்."

"மணி என்ன தெரியுமா?"

மௌனம்.

"நான், அதாவது உங்க பாஸ், தினம் தவறாம எத்தனை மணிக்கு ஸீட்டுக்கு வந்து சேர்றேன் தெரியுமா? எய்ட் ஷார்ப்."

"ஸாரி ஸார், ட்ராஃபிக்கில மாட்டிக் கிட்டோம்."

"முப்பது நாளைக்கு முப்பது காரணங்கள் சொல்றீங்க. லேட்டா வர்றது உங்களுக்குப் பழக்கமாப் போச்சு. ஆபீஸ்ல எத்தனை பெண்கள் இருக்காங்க! அவங்களுக்கெல்லாம் குழந்தைகள் இல்லையா, ட்ராஃபிக் இல்லையா?"

"அவர்களுக்கெல்லாம் மாமியார், அம்மா யாராவது தாங்கறாங்க..." என்று சொல்லவில்லை.

> **உடனே எழுதுங்கள்**
> **மத்யமர் — வாசகர்**
> **விமர்சனப் போட்டி!**
>
> **'தியாகம்' மத்யமர் வரிசையில் சுஜாதா எழுதிய கடைசிக் கதை இது. இக்கதையைப் படித்ததும் உங்களுக்கு என்ன தோன்றுகிறது. உடனடியாக உங்கள் எண்ணங்களை ஓர் அஞ்சல் அட்டையில் எழுதிக் கல்கி அலுவலகத்துக்கு அனுப்புங்கள்.**
>
> **பிரசுரமாகும் ஒவ்வொரு விமர்சனத்துக்கும் ரூ. 25 பரிசு. சிறந்த விமர்சனத்துக்கு ரூ. 50!**
>
> **முடிவு தேதி: 10.9.90**

"வாட்ஸ் யுவர் ப்ராப்ளம் அருணா...?"

மௌனம்.

"குல்பர்காவுக்கு ட்ரான்ஸ்பர் பண்ணிடட்டுமா?"

"வேண்டாம் ஸார்."

"ஏன் இப்படி தினம் லேட்டா வர்றீங்க... ஸாரி, பொறுத்துப் பொறுத்து அலுத்துப் போச்சு. நாளையிலிருந்து 8:5க்குள்ள வரலைன்னா ஸாலரி... கட் அரை நாள்.. ஒரு காஷன் மெமோ கொடுக்கப் போறேன்..."

நின்று கொண்டிருந்தாள்.

"போகலாம்."

**மே**சைக்குத் திரும்பியதும் சூப்ரிண்டண்ட் அவளைக் கண்ணாடியைச் சரித்துப் பார்த்து, "எதுக்காக நீங்கள்ளாம் வேலைக்கு வரணும்னே தெரியலை!" என்றார்.

கண்களில் ததும்பிய நீரைத் தடுத்துக் கொண்டு ஃபைலில் சடுபட்ட போது, "அருணா நீங்க இன்னிக்கு ஓ.டி. ஸ்டேட்



**மாணவன்: சார், இந்தக் கணக்கில நாலாவது ஸ்டெப் மட்டும் புரிய மாட்டேங்குது...?**

**ஆசிரியர்: நோட்ஸ்ல அப்படித்தான் கொடுத்திருக்கான். நான் மட்டும் என்ன செய்ய முடியும் சொல்லு பார்க்கலாம்...**

**— ஆர். ரத்தினசாமி.**

---

மெண்ட்டை முடிச்சுட்டுத்தான் போகணும். இல்லைன்னா ஜி. எம். கோவிச்சுப்பார்.''

''சரி, ஸார், ஒரு ஃபோன் பண்ணிக்கலாமா?''

''உன்னூர்னா சரி'' என்று ஃபோனை அவள்பால் இஷ்டமின்றித் தள்ளினார்.''

''ஹலோ, ஏ.பி.எஸ்.ஸி., கொஞ்சமீ இ.ஒ. செக்‌ஷன்ல ரமேஷைக் கூப்பிட றீங்களா.. அவங்க ஒய்ஃப் பேசறேன்.''

ரமேஷ் வந்து, ''என்ன அருணா?''

''சாயங்காலம் நீங்கதான் குழந்தைகளை அழைச்சுக்கிட்டு வரணும். எனக்கு லேட் ஆகும்.''

''மானேஜர் சத்தம் போட்டானா ராஸ்கல்!''

''ஆமாம்'' உங்களுக்கு ஏதும் ப்ராப்ளம் இல்லையே...''

''என்னை யாரும் கேட்க முடியாது. ஓட்டியா?''

''ஸ்டேட்மெண்ட் முடிக்கணும். வீட்டில வந்தப்புறம் பேசலாம்.''

''தாங்க்ஸ் ஸார்'' என்று ஃபோனை வைத்து, சீட்டுக்குப் போன போது ப்யூன் இரண்டடி உயரத்துக்கு ஃபைல் கட்டுகளை மேசை மேல் வைத்திருந்தான். ஒவ்வொன்றும் கேஸ் ஸ்டேட்மெண்ட் போட்டு, ட்ராப்ட் தயார் செய்து, சூப்ரிண்டெண்டுக்கு அனுப்ப வேண்டும். நளினியின் மேசை காலியாக இருந்தது. புதுசாக வந்திருக்கும் மைசூர் க்ரேப் சேலை பற்றிக் காவேரியுடன் பேசிக் கொண்டிருந்தாள்.

எரிச்சலாக வந்தது. யாருடன் சண்டை போட முடியும்? கேட்டால், 'தினம் டயத்துக்கு வா. அதற்கப்புறம் கேள்!' என்பார் சூப்ரிண்டெண்ட்.

நளினி நாஸுக்கான பெண். அவள் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவதும் மார்புப் புடைவை தங்காததும் அடிக்கடி மானேஜர் அறைக்குப் போவதும் நன்றாக இல்லை.

மற்றொரு கவலை வேறு உறுத்திக் கொண்டே இருந்தது. அசதியில் கண்ணைச் சுழற்றியது. டைப் அடித்ததெல்லாம் பிரிந்து தெரிய ஏன் இந்த மயக்கம் என்று புரியவில்லை. இந்த ரேட்டில் அஞ்சு வருஷத்தில் செத்துப் போய் விடுவேன். ஏதாவது ஒன்று தீர்மானம் பண்ணியே ஆக வேண்டும்.

மேனேஜரிடமிருந்து வந்த மெமோவைக் கூடச் சரியாகப் படிக்கவில்லை. **'You are advised to be more careful in future as this is the last time'** என்றெல்லாம் எழுதியிருந்தது.

என்ன ஆகும்? வேலையை விட்டு நீக்குவார்களா? நிம்மதி! நீக்கட்டுமே... அதற்குள் நானே ராஜினாமா கொடுத்து விடுகிறேன். இன்று முரளியுடன் பேசியே ஆக வேண்டும்.

**நா**லரை மணிக்கு முரளியின் ஃபோன் வந்தது. ''குழந்தைகள் க்ரீஷ்ல இல்லை. கதவு பூட்டியிருக்கு.''

''என்னது சரியாப் பார்த்தீர்களா?''

''பார்த்தாச்சு! நீ என்ன பண்றே... நேரே வந்து...''

''லேட்டா போனீர்களா?''

''ஆமாம் கொஞ்சம் லேட்டு.''

''பிரின்சிபால் வீடு பின்னால் இருக்கு. லேட்டாப் போனா அங்கே அனுப்பிச்சுருவா. போய்ப் பாருங்க.''

''நீயே வாயேன் ஒரு அரை மணி பர்மிஷன் வாங்கிண்டு.''

''முடியாது. இன்னிக்கு நிச்சயம் கிடைக்காது! எல்லாரும் கடுப்பா இருக்காங்க!''

''சரி'' என்று அலுத்துக் கொண்டான்.

**ஸ்**டேட்மெண்ட் முடிக்க ஏழாகி விட்டது. பி.டி.எஸ். பஸ் பிடித்து வீடு வந்து சேருவதற்கு எட்டு. ஜிபாவின் அலறலும் நந்துவின் அழுகையும் தெருமுனை திரும்பினதுமே கேட்டது. அவள் போய் இருவரையும் அணைத்துக் கொண்டதும்தான் நின்றது. ஜிபா பயந்திருந்தது. அப்பாவைப் பார்த்தது.

''கிள்ளினீங்களா?''

''சேச்சே!''

''அடிச்சா அப்பா!'' என்றான் நந்து. அவன் கன்னத்தில் விரல் அடையாளம் சிவப்பாக இருந்தது.

''சும்மாரு ராஸ்கல்!''

''என்ன ஒரு க்ரீஷ்! நான் போறேன்... பிரின்ஸிபால் வீட்டில் வாசல்ல மண்ணில விளையாடிண்டிருக்கு குழந்தை. வேலைக்காரி எங்கேயோ நிக்கறா. இவன் நிக்கர் எல்லாம் கிழிச்சுண்டிருக்கான். இது இன்னிக்கு ஒரு தம்ளர் மண்ணு தின்னிருக்கு!

மாசம் இருநூறு ரூபா வாங்கிண்டு. எவ்வளவு மோசமான க்ரீஷ்! அருணா ஏதாவது செய்தே ஆகணும். வேற இடம் பார்த்துரு.''

''பக்கத்தில் வேற இடம் இருக்கா என்ன?''

''இல்லை. ஏன் உங்கம்மாவை வந்து மூணு மாசம் இருக்கச் சொல்லேன்.''

''எங்கம்மா வரிசையா பிரசவம் பார்த்துண்டிருக்கா. வர மாட்டா! உங்கம்மா வரலாமே!''

''காட்டராக்ட் கண்ணை மறைக்கிறது. ஆபரேஷனுக்கு காத்திண்டு இருக்கா. அவளால எப்படி வர முடியும்?''

''வாஸ்தவம்தான்.''

''குழந்தை ரெண்டும் பாழாப் போறது! இந்த நந்துவைப் பாரு... ஆட்டோ ஷாப்ல க்ளீனர் பையன் மாதிரி இருக்கான். என்னைக் கண்டாலே ரெண்டும் அலறல். நான்தான் அப்பான்னு எப்பவாவது சொல்லி வெக்கறியா இல்லையா?''

''என்னையே தெரியுமாங்கறது சந்தேகம். ஞாயிற்றுக் கிழமையைத் தவிர மற்ற தினங்களில் எங்க அவங்களோட பழக முடியறது? ஆபீஸ்லேயிருந்து வந்த உடனே சமையல், சாப்பாடு, தூக்கம். காலைல் எழுந்ததும் ஆபீஸுக்கு ஓட்டம்!''

''அருணா இதை நிச்சயம் நாம நிறுத்தியே ஆகணும்! எதுக்காக ரெண்டு பேரும் வேலைக்குப் போறோம்? ஒருத்தர் சம்பளம் பத்தலை. அதனால்தானே!''

''வந்த சம்பளத்தில் பாதி சேமிப்பு நிதிகளுக்கே கட்டியாறது. அதை நிறுத்திட்டா ஒரு சம்பளம் போறும்.''

''அப்ப குழந்தைகளுடைய எதிர்காலம்?''

''எதிர்காலத்துக்குப் பணம் கட்டி நிகழ்காலத்தைக் கோட்டை விட்டுண்டிருக்கோம். எனக்கு எல்லாமே கனவில் நடக்கற மாதிரி இருக்கு. குழந்தைகள் பிடுங்கல், தினப்படி அவசரம். அவலம். ஆபீஸ்ல என் மானேஜர் நரசிம்மாவதாரம். பஸ்லில போய் ஸ்கூட்டர்ல போய், குழந்தைகள் ஏங்கிப் போய்! எதுக்காக எதைச் சாதிக்க இப்படி அங்காடி நாய் போல அலையறோம்னு பிரமிப்பா இருக்கு. போதாக்குறைக்கு இந்தக் கவலை வேறு!''

''எந்தக் கவலை?''

''மறுபடி உண்டாயிருக்கேனான்னு! தள்ளிப் போறது!''

அவன் திடுக்கிட்டு. ''அய்யோ இது என்ன புதுசா? மாத்திரை சாப்பிடலையா?''

''என்னவோ தினப்படி குழப்பத்தில் என்ன முழுங்கினோம் என்ன முழுங்கலைனே நினைவே இல்லை.''

''அய்யோ! வா டாக்டரை பார்த்துடலாம்.''

''ஆமாம். மற்றொரு பிரசவம், மெடர்னிட்டி லீவு தள்ளிப் போடறதுக்காக எட்டாவது மாசம் வரை ஆபீஸ் போயிண்டு! சே போறும்பா!''

''முதல்ல இதைக் கவனிக்கலாம்.''

டாக்டர் ஜெயலட்சுமியின் வரவேற்பறையில் நாற்பது தாய்மாரும் நாற்பது குழந்தைகளும், இருபது கர்ப்ப ஸ்திரீகளும் காத்திருந்தார்கள். நந்துவின் பிடுங்கல் தாங்காது. சாக்லேட் வாங்கித் தர வேண்டியிருந்தது. ஜிபா மடியில் தூங்கிப் போனது. ஒன்பது மணிக்குத்தான் நம்பர் வந்தது.

தீரப் பரிசோதித்து விட்டு. ''ப்ரக்னன்ஸி போலத்தான் இருக்கு. ஆனா இப்ப முடிவாச் சொல்றதுக்கில்லைம்மா. அடுத்த வாரம்தான் கன்ஃபர்ம் பண்ண முடியும். உனக்குள்ள எப்படி ஃபீல் பண்றே?''

''ரொம்ப டயர்டா இருக்கு டாக்டர்.''

''நாசியா?''

''இல்லை டாக்டர்.''

## சஞ்சீவி மலை வெற்றிலை!



டெல்லி கன்னாட் சர்க்கிள் பகுதியில் ஒரு பீடா கடை உள்ளது. இதில் உலகப் புகழ்பெற்ற ஓவியர் எம். எஃப். ஹுஸைன் தீட்டிய ஓர் ஓவியம் இருக்கிறது. பல ஆயிரம் கொடுத்தாலும் கிடைக்காத இந்தப் படம் கடைக்காரர் சிவநாராயணன் பாண்டேவுக்கு எப்படி கிடைத்தது?

ஹுஸைன் பேரும் புகழும் பெறுவதற்கு முன்பிருந்தே இந்த வெற்றிலை பாக்குக் கடைக்கு வந்து போய்க் கொண்டு இருந்திருக்கிறார். அவரிடம் பாண்டே ஒரு படம் வரைந்து கொடுக்குமாறு கேட்டார். இத்தனை நாளாகிற்று ஹுஸைனுக்குத் தம் வாக்கைக் காப்பாற்ற. சமீபத்தில்தான் ஓவியம் தீட்டி அளித்தார்.

அந்த ஓவியத்தில் ஹநுமார் சஞ்சீவி மலையைக் கையில் தூக்கிக் கொண்டு பறக்கிறார். மலையில் சஞ்சீவி மூலிகைக்குப் பதிலாகப் பாண்டேயின் புகழ்பெற்ற வெற்றிலைகள் காட்சி தருகின்றன!

ஆதாரம்: இண்டியா வீக்.

தகவல்: சேலம் சக்திக்கொடி.

